வெண்ணிற ஆடை நிர்மலா எம்.எல்.ஸி.யாக நியமிக்கப்பட்டதும், 'அது தவறு; அவர் 'இன்ஸால்வன்ஸி' கொடுத்தவர்' என்று உயர் நீதி மன்றத்தில் மனு தாக்கலாகியதும், அந்த நியமனம் செல்லாது என்று அறிவிக்கப்பட்டதும் அனைவருக்கும் தெரியும்.

ஆனால் சமுதாய நலனை முன்னிட்டு அந்த மனுவை உயர் நீதி மன்றத்தில் தாக்கல் செய்தது யார்? விழிப்புடன் இருந்து இந்த ஜனநாயகப் பணியாற்றியது யார்?

ஹைகோர்ட்டில் போய் 'ரிட் பெட்டிஷன் கோபாலன் யாருங்க?' என்று கறுப்புக் கோட்டு அணிந்த யாரைக் கேட்டாலும், கோபாலனைக் காண வழி சொல்லுவார்கள்.

ஹைகோர்ட்டுக்குக் கோபாலன் புதியவரல்ல. 45 ரிட் பெட்டிஷன்களைத் தாக்கல் செய்து மனிதர் ஒரு சாதனையே படைத்திருக்கிறார்!

* தியேட்டருக்குப் போகிறோம். ஏ.ஸி. தியேட்டர்தான். ஆனால் உள்ளே உட்கார முடியாமல் புழுங்குகிறது. ஏ.ஸி.க்குப் பணத்தைவாங்கிக்கொண்டு நம்மைஏமாற்றுகிறார்களே தியேட்டர் முதலாளிகள் என்று நாம் முணுமுணுப்பதோடு சரி. ஆனால் கோபாலன் மனம் குமுறுவதோடு நிற்பவரல்ல. ஹைகோர்ட்டில் ரிட் ஒன்று தாக்கல் செய்து தியேட்டர் அதிபர்களைக் கூண்டுக்கு இழுத்தவர்!



மேலவையிலிருந்து

# வெண்ணிற ஆடை நிர்மலாவை வெளியேற்றியவர்



* பஸ்ஸில் இரண்டு ரூபாய் நோட்டைக் கொடுத்து '40 பைசா டிக்கெட்' என்றதும் சற்றும் கருணையற்று 'சில்லறை இல்லீங்க' என்று நம்மைக் கீழிறக்கி விடுகிறார் பஸ் கண்டக்டர். இந்த நிலையை ஒழிக்க — அதாவது மக்களுக்குச் சில்லறைத் தடங்கலின்றிக்

மேலட்டை — வண்ணப்படம் எடுத்தவர்: யோகா.

கிடைக்க வேண்டுமென்பதற்காக அரசு மீதே ரிட் போட்டிருக்கிறார் கோபாலன்.

* கல்பாக்கம் முதல் யூனிட் மின்சாரத்தில் எங்களுக்கும் பங்குண்டு என்று கர்நாடகா, ஆந்திரா அரசுகள் வாதிட்டபோது, 'தமிழகத்துக்கு மட்டுமே அந்த மின்சாரம் உரியது' என்று ரிட் போட்டார் கோபாலன்.

* 'நான் மகான் அல்ல' என்று ஒரு படம் வந்ததே! ஞாபகம் இருக்கிறதா? 'நான் காந்தி அல்ல' என்ற பெயரைத் தாங்கி வெளிவர இருந்தது இந்தப் படம். இதற்குத் தடை விதிக்க வேண்டுமென்று ரிட் தாக்கல் செய்து, கோபாலன் தாமே வழக்காடினார். இத்தனைக்கும் கோபாலன் வழக்கறிஞர் அல்ல!

கர்நாடகாவில் தமிழர்கள் தாக்கப்படுகிறார்களா? முதலமைச்சரின் பெயரைச் சொல்லி (!) அதிகாரிகள் வசூல் கொள்ளை நடத்துகிறார்களா? — உடனே கோர்ட்டை நோக்கிப் படையெடுத்து விடுகிறார் கோபாலன்.

சைதாப்பேட்டை, கருணாநிதி தெருவில் கோபாலன் வீடு. அவரைச் சந்திக்கச் சென்றபோது வாசலில் நம்மைப் பல குழந்தைகள் சூழ்ந்து கொள்கின்றன. 52 வயதாகும் கோபாலனுக்கு ஏழு குழந்தைகள். காந்தி, போஸ், பெரியார் என்று பல தலைவர்களின் படங்களை வீட்டில் மாட்டி வைத்திருக்கிறார்.

காலிங் பெல்லை அழுத்தினால் ஒரு சந்தேகத்துடனேயே கதவு திறக்கப்படுகிறது. சமீப காலங்களில் வீட்டின் மீது சோடா பாட்டில்கள் வீசப்படுவதும், ரவுடிகள் மிரட்டுவதும் சகஜமாகி விட்டதாம்! அதனால் தான் கதவைத் திறக்க அத்தனை யோசனை!

''1972 வரை நான் தி.க.வில் இருந்தேங்க'' என்று ஆரம்பிக்கிறார் கோபாலன். இப்போது நெற்றியில் பட்டை பட்டையாக விபூதி. ''எனக்கு எம்.ஜி.ஆர்., வீரப்பன் எல்லோரும் தெரிந்தவங்கதான். என் மனைவி அந்தக் காலத்தில் பிரபலமாக விளங்கிய சினிமா கதாசிரியர் இளங்கோவனின் மகள், நானே பல நாடகங்களில் நடித்திருக்கிறேன்.''

''பொது மக்கள் நன்மை கருதி பல ரிட்களைத் தொடுக்கிறீர்களே! இதற்கு உங்களை ஊக்குவித்தது எது?''

''மூன்று வருஷங்களுக்கு முன் பயங்கரத் தண்ணீர்ப் பஞ்சம் வந்ததே. அப்போது எங்கள் பகுதியில் ஒரு குடம் தண்ணீர் 15 பைசாவுக்கு விற்கப்பட்டது. இந்த வேலையைச் செய்தவர் இப்போது ஒரு எம்.எல்.ஏ.! இதைத் தட்டிக் கேட்டேன் என்பதற்காக, குண்டர்களை ஏவி என்னை விளக்குக் கம்பத்தில் கட்டி வைத்துவிட்டார்கள்! என் மனைவியின் கழுத்தில் கத்தியை வைத்து மிரட்டினார்கள்! என் மூன்றாவது பையனை உயரே தூக்கிப் போட்டுப் பிடித்து மரண விளையாட்டு ஆடினார்கள்! போலீஸ் வந்து என்னை விடுவித்தது. இந்த நிகழ்ச்சி என்னிடம் பயத்தை ஏற்படுத்திவிடும் என்று நினைத்தார்கள். ஆனால் இதற்கு நேர்மாறாக, என்னுள் வீராப்பு வளர்ந்தது. பொது மக்கள் நலனுக்காக நாம் ஏதாவது செய்தாக வேண்டும் என்ற வைராக்கியம் தோன்றியது.''

சென்னை சமூக நலச் சங்கம், வாடகைக் குடித்தனக்காரர்கள் நலச் சங்கம், ஏழைகளுக்குச் சட்ட உதவி நிலையம் என்று பல அமைப்புகளில் முக்கிய பொறுப்பில் இருக்கும் கோபாலன் இப்போது இரண்டு ரிட்களை தாக்கல் செய்திருக்கிறார்.

ஒன்று அமைச்சர் பொன்னையன் வீட்டில் அதிகாரிகள் ரெய்ட் நடத்தியதாகவும் கறுப்புப்பணம் கைப்பற்றப்பட்டதாகவும் நாளிதழ்களில் செய்தி வெளியானதையொட்டி அவர் ராஜினாமாவைக் கோருகிறது. (இப்போது இந்த ரிட் மனு தள்ளுபடி செய்யப்பட்டுவிட்டது.)

மற்றது, சபாநாயகர் பி. எச். பாண்டியன் ஒரு நீதிமன்றத் தீர்ப்பை மாற்றி அமைக்க முற்பட்டதால் (மறுநாள் அவர் தமது முடிவை மாற்றிக் கொண்ட போதிலும்) அவர் நீதிமன்றத்தை அவமதித்ததாகக் கருதி அவர் மீது நடவடிக்கை எடுக்கப்பட வேண்டும் என்கிறது.

விடைபெறும் முன்னர், ''உங்களுக்குப் பணம் கொடுத்துச் சமாதானப்படுத்த முற்படுவார்களே?'' என்று கேட்டேன்.

''ஆமாம் அதுவும் உண்டு'' என்று சிலர் நடந்து கொண்ட முறைகளைக் கோபாலன் கூறக் கேட்டபோது, 'ச்சே! இந்த நாடு இதை விடக் கீழிறங்கவே முடியாது; அதலபாதாளத்திற்குப் போய்விட்டது' என்ற எண்ணமே மேலோங்கியது!

''இப்படிப் பல ரிட் மனுக்களைப் போடுவதால் ஏகப்பட்ட செலவாகுமே'' என்றதும், ''அதெல்லாம் ஒண்ணும் பெரிய செலவில்லீங்க. கடவுள் புண்ணியத்தில் எனக்கு என் தொழிலில் (ஏலகம்பெனி) நல்ல வருமானம்! யாரிடமும் உதவி எதிர்பார்க்க வேண்டிய அவசியம் இல்லை'' என்றார். மேலும் சில வழக்கறிஞர்கள், குறிப்பாக எஸ்.கே. சுந்தரம் போன்றவர்கள் தரும் ஆதரவு பற்றி நன்றியோடு குறிப்பிட்டார்.

கோபாலன் அடுத்ததாகப் போட இருக்கும் ரிட்:

'சத்துணவுக் கூடங்களில் எம்.ஜி.ஆர். குழந்தைகளுடன் சாப்பிடும் படத்தை வைக்க அரசு எட்டு லட்ச ரூபாய் செலவழிக்க இருப்பதை எதிர்த்து!'

பெஸ்ட் ஆஃப் லக் கோபாலன்!

சந்திப்பு: ப்ரியன்

படம்: மணி

# மாதம் ஒரு மாவட்டம்

கல்கி ஏற்கும் சமுதாயப் பணி



# இந்த மாதம் அண்ணா மாவட்டம்

மதுரையிலிருந்து அண்ணா மாவட்டம் பிரிந்த பிறகு என்னென்ன வளர்ச்சிகளைப் பெற்றிருக்கிறது? மாவட்டத் தலைநகரான திண்டுக்கல்லில் நிலவும் கடுமையான குடிநீர்ப் பஞ்சம்கூட இன்னும் தீர்த்து வைக்கப் படவில்லை! அகதிகளாக வந்திருக்கும் இலங்கைத் தமிழர்கள் கொடைக்கானலில் கொத்தடிமைகளாக நடத்தப்பட்ட விஷயம் நாம் ஒவ்வொருவரும் வெட்கித் தலைகுனிய வேண்டிய அவமானம்.

இவை மட்டும்தானா? இன்னும் எத்தனையெத்தனையோ பிரச்னைகள் காலம் காலமாகத் தீர்த்து வைக்கப்படாமல் இன்னமும் தொடர்ந்து கொண்டே இருக்கலாம். சமூக நீதியோடு தனி மனிதர்களுக்குக் கிடைக்க வேண்டிய நீதியும் கிடைக்கப் பெறாமல் பலருடைய வாழ்க்கை ஓர் அவலத்திற்கு உள்ளாகியிருக்கலாம். இவற்றையெல்லாம் நமது அரசியல்வாதிகளும், அதிகாரிகளும் கண்டு கொள்ளாமல் காலம் கடத்திக் கொண்டும் இருக்கலாம்.

ஆகவேதான், 'மாதம் ஒரு மாவட்டம்' என்ற தலைப்பில் கல்கி ஏற்றிருக்கும் சமுதாயப் பணியில் ஆறாவது மாவட்டமாக அண்ணா மாவட்டத்தைத் தேர்ந்தெடுத்திருக்கிறோம்.

அண்ணா மாவட்டத்திலுள்ள நீங்கள் அனைவரும் உங்கள் மாவட்டப் பிரச்னைகள் அல்லது உங்கள் ஊர்ப் பிரச்னைகள், இல்லையெனில் தனி மனிதர்களுக்கு இழைக்கப்பட்ட அநீதிகளையும் அமைச்சர்களுடைய — அதிகாரிகளுடைய மெத்தனப் போக்குகளையும் சுருக்கமாக எழுதி உங்கள் முழு முகவரியோடு கல்கி அலுவலகத்திற்கு அனுப்புங்கள். இவற்றோடு உங்கள் மாவட்ட வளர்ச்சிக்கான ஆலோசனைகளையும் உங்கள் மாவட்டத்தில் நிகழ்ந்துள்ள சாதனைகளையும் எழுதலாம்.

கல்கி அலுவலகத்திற்கு வரும் உங்கள் ஒவ்வொருவருடைய கடிதத்தையும் பரிசீலனை செய்து, முக்கியமானவற்றைத் தேர்ந்தெடுத்து, ஜூலை மாதம் இரண்டாவது வாரத்தில் நமது கல்கி பிரதிநிதிகள் அண்ணா மாவட்டத்தில் சுற்றுப் பயணம் செய்வார்கள்; உங்களைச் சந்தித்துப் பேசுவார்கள். அவர்கள் வரும் தேதி பற்றிய விவரங்கள் தனித்தனிக் கடிதங்கள் மூலம் பிறகு தெரிவிக்கப்படும்.

அதன் பிறகு, கல்கி பிரதிநிதிகள் அண்ணா மாவட்டக் கலெக்டரைச் சந்தித்துத் தாங்கள் சேகரித்து வந்த பிரச்னைகளுக்குரிய விஷயங்களைப் பற்றி விவாதித்துப் பதில்களைப் பெறுவார்கள். பின்னர் அவையெல்லாம் ஆகஸ்டு மாதக் கல்கி இதழ்களில் செய்திகளாகவும், பேட்டிக் கட்டுரைகளாகவும், புகைப்படங்களாகவும் பிரசுரமாகும். எல்லாப் பிரச்னைகளையும் பிரசுரித்துவிட முடியாது என்றாலும் கூட அவற்றையெல்லாம் கலெக்டரிடம் விவாதிப்பதின் மூலம் சம்பந்தப்பட்டவர்களின் கவனத்திற்காவது கொண்டு வரலாமல்லவா? உடனே எழுதுங்கள்.

**அண்ணா மாவட்டம் பற்றிய பிரச்னைகளும், குறைகளும், அநீதிகளும் தவிர, சாதனைகளும் கல்கி அலுவலகத்திற்கு வந்து சேர வேண்டிய கடைசி தேதி: 20.6.86. உறையின் மேல் 'மாதம் ஒரு மாவட்டம் — அண்ணா' என்று குறிப்பிட்டால் பரிசீலனைக்கு உதவியாய் இருக்கும்.**

— ஆசிரியர்



''நம்ப குழந்தைக்கு ஆறு மாதம்தாளு கிறது என்றாலும் அறிவு ஜாஸ்தி!''

''எப்படிக் கண்டு பிடிச்சீங்க?''

''நீ என்னைத் திட்டும்போது மட்டும் சிரிக்குது பாரேன்!''

''என்னை இரண்டு பேர் கல்யாணம் செய்து கொள்ளும்படி தினமும் சும்மா, சும்மா, வற்புறுத்துறாங்கடா!''

''டேய் ராமு...! யார்ரு அந்தப் பெ...ண்...கள்...!''

''பெண்களல்ல! என்னுடைய அப்பா வும் அம்மாவும்தான்!''.

— ச. எஸ். ஆர்.

பத்திரிகை ஆசிரியர்: ''கதாநாயகன் 'டெம்போ'விலிருந்து இறங்குகிறான். வில்லன் 'டெம்போ'வில் வருகிறான். கதாநாயகி வருவதும் 'டெம்போ' வில்தான். எல்லாம் 'டெம்போ' மய மாக இருக்கிறதே உங்கள் கதையில். என்ன சங்கதி?''

கதாசிரியர்: ''ஹி ஹி. முன்னே நான் கொண்டு வந்த கதையில் கொஞ்சங் கூட 'டெம்போ' இல்லேன்னு சொன் னீங்களே. அதான்...''

— அ. சுந்தரம்.



''ஒன், டு, த்ரீ, ஃபோர், ஃபைவ், சிக்ஸ், செவன், எய்ட்ஸ்....''

''எயிட்ஸ் இல்லேடா மண்டு, எயிட்!''

நோயாளி: என்னை ஸ்ட்ரெச்சரில் எங்கே கொண்டு போறாங்க!''

நர்ஸ்: தியேட்டருக்கு!

நோயாளி: மேட்னியா? மாலைக் காட்சியா?'

— சடுவை கோபால்சாமி.



''வெயில்ல ஆபீசுக்குப் போறீங்களே! ஒருகுடை வாங்கட்டுமான்னு உங்கமனைவி கேட்டதுக்கு ஏன் வேணாங்கறீங்க?''

''நாலு புடைவை வாங்கினால் ஒரு குடை இலவசமா தர்றாங்களாம். அதைச் சொல்றான் அவள்!''

— ஏ. சுகுமார்



''நீ ஏன் வீட்டுப் பாடம் எழுதிட்டு வரலே?''

''புதிய கல்விக் கொள்கை அமுலுக்கு வந்திடுச்சுன்னு நெனச்சேன் சார்!''

# உண்மையிலேயே பாதுகாப்பை விரும்புவோர்க்கு



## பாலாஜி மோட்டார் & ஜெனரல் பைனான்ஸ்

(Hire Purchase Financiers for Motor Vehicles)

## டெபாசிட்தாரர்களுக்கு கூடுதல் வட்டி

# +2%

வழக்கமான விகிதத்துடன் வழங்கப்படுகிறது

கீழ்க்கண்ட வட்டி விகிதங்களில் டெபாசிட்டுகள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன

| காலம் | வட்டி | மொத்தம் |
|---|---|---|
| 1-வருடம் | 17 + 2 | 19% |
| 2-வருடங்கள் | 18 + 2 | 20% |
| 3-வருடங்கள் | 19 + 2 | 21% |
| 5-வருடங்கள் | 22 + 2 | 24% |

ரூபாய் 20,000/க்கு மேல் டிபாசிட் செய்யும் ஒவ்வொரு டிபாசிட்டுக்கும் ஊக்க போனசும், மிக மதிப்புள்ள அன்பளிப்பும் வழங்கப்படும்.

உங்கள் டெபாசிட்டுகளை அனுப்பும் முகவரி

சென்னை : 91, உஸ்மான் ரோடு,
(சிவா-விஷ்ணு கோயில் அருகில்)
தி.நகர், சென்னை-600 017.
போன் : 447186/442218/445480

பெங்களூர் : 24/1-A, மார்கோஸா ரோடு (10வது கிராஸ்)
மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003.
போன் : 366971

திருச்சி : 22, மதுரை ரோடு (முதல் மாடி)
ராஜா தியேட்டர் அருகில்
திருச்சி-620 008, போன் : 31376/29772

பாண்டிச்சேரி : 11, நேரு தெரு (கனரா வங்கி எதிரில்) 2வது மாடி,
பாண்டிச்சேரி-605 001. போன் : 6493

தஞ்சாவூர் : எண் : 2 & 3 முதல் மாடி, ஜி.ஏ.கனால் ரோடு,
தஞ்சாவூர்-613 001, போன் : 1626

திருவண்ணாமலை : 14/A, ஆனைக்கட்டி தெரு,
திருவண்ணாமலை-606 601, போன் : 2483

பட்டுக்கோட்டை : 121, தலையாரி தெரு, (முதல் மாடி)
பட்டுக்கோட்டை-614 601, போன் : 453

கோயமுத்தூர் : 666, ராஜா வீதி (முதல் மாடி)
கோயமுத்தூர்-641 001, போன் : 34369

மதுரை : 41, வடக்கு வெளி வீதி (முதல் மாடி)
மாடர்ன் லாட்ஜ் ஸ்டாப்பிங், மதுரை-625 001.

JAY ADTS

புதுக்கோட்டையிலுள்ள அரசுத் தலைமை மருத்துவ மனையில், குடும்பக் கட்டுப் பாடு அறுவைச் சிகிச்சை செய்துகொண்டார் ராமாயி. நான்கு குழந்தைகளுக்குத் தாய். சிகிச்சைக்குப் பிறகு அவருக்கு வலது கையில் காம்போஸ், ஃபோர்ட்வின் மருந்து கள் ஊசி மூலம் செலுத்தப்பட்டன. கை வீங்கிப் போய், வலி பொறுக்கமாட்டாமல் இரண்டு நாட்கள் பொறுத்து மறுபடி அரசு மருத்துவமனையிலேயே அவர் சேர்க்கப்பட் டார். ஆனால் என்ன காரணமோ, அன்றே அங்கிருந்து கிளம்பித் தனியார் ஆஸ்பத்திரி ஒன்றில் சேர்ந்தார். இரண்டு நாளைக்குப் பிறகு மறுபடி அரசு மருத்துவமனைக்கே வந் தார். விரல்கள் கறுத்துப் போய், முழங்கைக் குக் கீழே மரத்துப் போய்விட்டது. சென்னை ஸ்டான்லி மருத்துவமனைக்கு அனுப்பப் பட்டு, அங்கே முழங்கைக்குக் கீழே வெட்டப் பட்டு, வீடு போய்ச் சேர்ந்தார் ராமாயி....

சமீபத்தில்கூட தஞ்சை அரசினர் மருத்துவ மனையில் (ஆம், கால் கொப்புள ஆபரேஷ னுக்குப் போய்க் காத்திருந்த சிறுவனுக்குச் சிறுநீர் பிரிகிற இடத்தில் அறுவைச் சிகிச்சை செய் து, 'புகழ் பெற்ற' ஆஸ்பத்திரியில் தான்), குடும்பக்கட்டுப்பாடு அறுவைச் சிகிச்சைக்குப் பிறகு இறந்தே போனாளாம் ஒரு பெண்.....

இவையெல்லாம் செய்தித் தாள்களில் வெளியான, அதனால் பலருக்குத் தெரிந்து போன நிகழ்ச்சிகள். இவை போல் எத்தனை கேசுகள் பொது மக்களுக்குத் தெரியாமலே போகின்றனவோ, யாருக்குத் தெரியும்?

''கடந்த 84—85ல், கல்யாணம் ஆகாதவர் களுக்குக்கூட குடும்பக் கட்டுப்பாடு அறுவை சிகிச்சை தவறான முறையில் நடைபெற்றதா?' என்று தி.மு.க. உறுப்பினர் மணிமாறன் 13.5.86 அன்று சட்டசபையில் கேட்ட கேள்விக்கு, அமைச்சர் ஹண்டே அளித்த பதிலைப் பாருங்கள்:

''அப்படி இரண்டு புகார்கள் வந்தன. வட ஆற்காடு மாவட்டம் முசிலம்பூரில், திரு மணம் ஆகாத அகமது பாஷாவுக்கு, அரக் கோணம் மருத்துவமனையில் அறுவைச் சிகிச்சை செய்யப்பட்டது. சேலம் பாரதி நகர் ராணியின் திருமணம் ஆகாத தம்பிக்கு (வயது 17) சேலம் அரசு மருத்துவமனையில் அறுவைச் சிகிச்சை நடைபெற்றது: அவர் களுக்கு மறு அறுவைச் சிகிச்சைக்கு உத்தர விடப்பட்டுள்ளது.''

குடும்பக் கட்டுப்பாடு அறுவைச் சிகிச் சைக்கு, குறியீட்டு அளவு வைத்தாலும் வைத் தார்கள், யாருக்குத்தான் ஆபரேஷன் செய்வது என்ற விவஸ்தை இல்லாமல் போய் விட்டது. ஆட்களின் எண்ணிக்கையைக் கூடுதலாகக் காட்டுவதற்காக, வயதானவர் களுக்கும் (70—80 வயது!) குடும்பக் கட்டுப் பாடு அறுவைச் சிகிச்சை செய்திருப்பதாகச் செய்திகள் வந்தன.

இந்த லட்சணத்தில், கருத்தடைத் திட்டத் தில் சாதனை செய்ததற்காக, தமிழ்நாட்டுக்கு மத்திய அரசிடமிருந்து இரண்டரைக் கோடி ரூபாய் பரிசு கிடைத்திருக்கிறது.

இப்போது இந்தப் பரிசை வாங்கிக்கையில்

# குடும்ப நலத் திட்டம்



*. லாப்ரோஸ்கோபி சிகிச்சை

வைத்துக் கொண்டு அமைச்சர் சொல்லி யிருக்கிறவிவகாரத்தையும்கொஞ்சம்பாருங் கள்:

"இங்கு தமிழ்நாட்டில் குடும்பக்கட்டுப் பாடு திட்டத்தை மிகத் தீவிரமாகச் செயல் படுத்துகிறோம். ஆனால் உத்தரபிரதேசம், ராஜஸ்தான், பீகார் போன்ற மாநிலங்கள் குடும்பக்கட்டுப்பாடு திட்டத்தைச் சரியாகச் செயல்படுத்துவதே இல்லை. உ.பி.யில்மக்கள் தொகை 11½ கோடி. அங்கு கு.க. அறுவைக் குக் குறியீட்டு அளவு ஆறரை லட்சம் பேருக்குத்தான். தமிழ்நாட்டில் மக்கள் தொகைநாலேமுக்கால்கோடி ஆக இருக்கும் பொழுது, இந்த ஆண்டு நமக்கு கு.க. அறுவைச் சிகிச்சைக்கு குறியீடு ஐந்தே கால் லட்சம் பேருக்குச் செய்ய வேண்டும் என்றால் இது என்ன நியாயம்?"

இதிலிருந்து என்ன தெரிகிறது? 'நீ திறமை யாகச் செயல்படுகிறாய், இந்தா பரிசு! இன்னும் தீவிரமாக கு.க. ஆபரேஷன்களைச் செய்து காட்டு' என்று தமிழ்நாட்டின் ஜனத் தொகையைக் குறைக்கிற மத்திய அரசு, எந்த மாநிலங்களில் தீவிரம் காட்டப்பட வேண் டுமோ, அம்மாநிலங்களைப் பொறுத்தமட் டில் மெத்தனம் காட்டுகிறது! திறமைக்கு முதுகில் சுமை ஏற்றப்படுகிறது; திறமை யின்மைக்கு முதுகில் ஷொட்டு தரப்படு கிறது!

குடும்பக்கட்டுப்பாடு நாட்டுக்கு அவசியம் என்பதில் இரண்டாவது கருத்து இருக்க முடி யாது. ஆனால் இப்படி இலக்குகளை நிர்ண யிப்பதும் அதை எட்டுவதற்காக ஏமாந்தவர் களையெல்லாம் இழுத்துப் போவதும், கு.க. வுக்கு ஆள்சேர்க்கப்பலரை நிர்ப்பந்திப்பதும் எப்படி நியாயமாகும்? கு.க. ஆபரேஷனுக் குச் சம்மதித்து சுதந்திரமாக மனம் விரும்பிச் செய்வதாக இருக்க வேண்டுமே தவிர, பணத் தாசைக்கோ, வற்புறுத்தலுக்கோ, அச்சுறுத் தலுக்கோ இணங்கச் செய்வது தனி மனித னின் சுதந்திரத்தில் தலையிடுவதாகாதா?

# குடி கெடுக்கவும் கூடும்!



• கு.க.வைபோட்டி கலை நிகழ்ச்சி

• அறுவைச் சிகிச்சைக்குப் பின் ஓய்வு பெறும் பெண்கள்.

தமிழ்நாட்டில் 1983—84ல், ஒரு நாளைக்கு முந்நூறு லேப்ரோஸ்கோபி அறுவைச் சிகிச்சை செய்துவிட்டதாகவும், இதுவரை அதிகபட்சமாக ஒரு நாளைக்கு நூறு ஆப ரேஷன்களே செய்து வந்ததை இது முறி யடித்துவிட்டதாகவும் பெருமிதத்தோடு வெளியிடப்பட்ட அரசுச் செய்தியை, கண்ட் ரோலர் அண்ட் ஆடிட்டர் ஜெனரல் தமது

அறிக்கையில் சாடியிருக்கிறார். இது துளிக் கூட சாத்தியமே இல்லை என்று சொன்னதோடு நிற்கவில்லை இந்த அதிகாரி. அவர் குறிப்பிடும் அடுத்த விவரங்களைப் பார்த்தால் தூக்கி வாரிப் போடுகிறது.

* பயிற்சி பெற்ற அரசாங்க மருத்துவர்கள் இருந்தும், இந்த ஆபரேஷன்கள் செய்தவர் அரசாங்க மருத்துவர் அல்ல. ஒரு பிரைவேட் டாக்டர். (ஒரு ஆபரேஷனுக்கு 50 ரூபாய்!)

* ஒரு ஆபரேஷனுக்கும் இன்னொரு ஆபரேஷனுக்கும் இடையே பத்து — பதினைந்து நிமிடம் லேப்ரோஸ்கோப் சாதனத்தை ஸ்டெரிலைஸ் செய்யத் தேவைப்படும். இந்த நிலைமையில், ராமநாதபுரம், கன்யாகுமாரி மாவட்டங்களில், ஒற்றை டாக்டராக ஒரு நாளைக்கு 320 ஆபரேஷன்கள் எப்படிச் செய்ய முடியும்?

* ஆபரேஷன் செய்து கொள்ளத் தகுதியானவர்தானா என்று மாவட்ட குடும்ப நலத் துறை சாம்பிள் செக்கிங் செய்திருக்க வேண்டும். எடுத்துக் கொண்ட ஏழு மாவட்டங்களில், ஐந்து மாவட்டங்களில் இது செய்யப்படவே இல்லை! (செய்த இரண்டு மாவட்டங்களிலும் ஒன்றில் 18%, இன்னொன்றில் 38% சிகிச்சை பெறத் தகுதி இல்லாதவர்கள் சிகிச்சை பெற்றதாகச் சொல்கிறது ஆடிட்டர் ஜெனரல் அறிக்கை.)

இது எவ்வளவு பெரிய அக்கிரமம்! எப்பேர்பட்ட அநீதி? மக்களை மனிதர்களாகக் கருதாமல் ஏதோ கறி காய் சீவுவது போல் அறுவைச் சிகிச்சைக்கு உள்ளாக்குகிறார்கள் என்பது தெளிவு. கருவிகளைச் சரியாக கிருமிகள் நீங்க ஸ்டெரிலைஸ் செய்வதுகூட இல்லை என்று முடிவு கட்டுவதில் தவறில்லை!

இதற்கிடையே, IUD எனப்படும் லூப் பொருத்திக் கொண்ட பெண்கள் படும் அவஸ்தைகள் சொல்லி முடியாது. கிருமித் தொற்று எனப்படும் இன்ஃபெக்ஷன், அதிகமான ரத்தப்போக்கு என்று பல பெண்களை அதிர அடித்து வருகிறது. அமெரிக்கா

# 'இனி கட்டாயப் படுத்துதல் இருக்காது'



"கு.க. திட்டத்தில் இலக்கை ஒழுங்காக நிறைவேற்றாத மற்ற மாநிலங்களை மத்திய அரசு தட்டிக் கேட்காமல் இருக்கும் போது நாம் மட்டும் ஏன் பாடுபட வேண்டும்? ஆகவே இந்த வருடம், கட்டாயப்படுத்துதல், வற்புறுத்துதல் போன்றவை இருக்காது'' என்றார் டாக்டர் ஹண்டே.

**நிருபர்:** சென்ற வருடம் எவ்வளவு செலவாயிற்று? தமிழக அரசும் சேர்ந்து செலவழித்ததா?

**ஹண்டே:** 27 கோடி ரூபாய் செலவாகியிருக்கும். இதில் அதிகபட்சமாக 2 கோடி ரூபாய் தமிழக அரசு செலவழித்திருக்கும். மீதி மத்திய அரசின் பணம்தான். ஆபரேஷன் செய்து கொண்டவர்களுக்குக் கையில் பணமாகவே 10 கோடி ரூபாய் கொடுத்திருப்போம். பின்னர் மருந்துகள், டாக்டர் சம்பளம், போன்றவை இருக்கின்றனவே!

**நிருபர்:** தமிழகத்தில் பல 'லேப்ரோஸ்கோபி' முகாம்கள் நடக்கின்றன. ஆனால் ஆபரேஷனுக்குப் பின்னர் கவனிப்புச் சரியில்லையே?

**ஹ:** இதை நான் ஒப்புக் கொள்கிறேன். தமிழகத்தில் 35000 படுக்கைகள்தான் இருக்கின்றன. ஆனால் 2500 படுக்கைகள்தான் கு.க. திட்டத்திற்காக ஒதுக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு ஆண்டும் இலக்கை அதிகப்படுத்திக் கொண்டே போவதால் படுக்கைகளின் எண்ணிக்கையும் அதிகரித்துக் கொண்டே போக வேண்டும். ஆனால் அதற்குப் பணம்? இருக்கின்ற வசதிகளை மேலும் பயன்படுத்திக் கொண்டால் மற்ற நோயாளிகள் பாதிக்கப்படுவார்கள். ஏழாவது ஐந்தாண்டு திட்டத்தில் 36000 கோடி கு.க. திட்டத்துக்கு ஒதுக்கியிருக்கிறார்கள். இதில் ஒரு கணிசமான தொகையை ஆபரேஷனுக்குப் பிறகு ஆக வேண்டிய செலவுக்காக ஒதுக்க வேண்டும். அப்போதுதான் நிலைமை சீர்படும்.

**நிருபர்:** கு.க. திட்டத்தில் பெண்களுக்கு ஆபரேஷன் செய்வது சரியா? அல்லது ஆண்களுக்குச் செய்வது சரியா?

**ஹ:** எது சரி என்பதை விட்டுவிட்டு எது மிகவும் பயனுள்ளது என்று கேட்டால் பெண்களுக்குச் செய்யப்படும் 'டியூபெக்டமி' தான். தங்கள் கணவர்கள் ஆபரேஷன் செய்து கொள்வதை பல பெண்களே விரும்புவதில்லை. காரணம், மனோதத்துவ ரீதியில் பார்த்தோமானால் குடும்பத்தில் பல பிரச்னைகள் வருகின்றனவாம்! ஆகவே ஆண்கள்தான் பெண்களை இந்த கு.க. திட்டத்தில், பங்கு கொள்ளச் செய்ய வேண்டும்!

விலுள்ள சேர்ள் அண்ட் கம்பெனி, வருடத்துக்குப் பதினெரு மில்லியன் டாலர் அளித்து வந்த இந்த வியாபாரத்தையே இழுத்து மூடி விட்டது, போதும்டா சாமி என்று. காரணம் என்ன தெரியுமா? இந்த லூப் பொருத்திக் கொண்டவர்களுக்குப் புற்று நோய் உட்படப் பலவித தொல்லைகள் ஏற்பட, எல்லாரும் நஷ்ட ஈடு கோரி அந்தக் கம்பெனி மீது வழக்குத் தொடுக்க ஆரம்பித்தார்கள். அயல் நாடுகளிலிருந்து இம்மாதிரி தரக்குறைவான கருத்தடைச் சாதனங்கள் எத்தனை எத்தனை இங்கு வந்து கொட்டிக் குவிக்கப்படுகிறது என்பதற்குக் கணக்கே கிடையாது. அந்த அயல்நாடுகளுக்குப் பணம்; இங்கே பிணி. நம்து படிப்பறிவில்லாத ஏழைப் பெண்களுக்கு வழக்குப் போடத் தெரியுமா, அல்லது முடியுமா?

சென்னை ஆர். எஸ். ஆர். எம். அரசு மருத்துவமனையில் தலைமை அதிகாரியாக இருந்தவரும், மகப்பேறு மருத்துவத்தில் நிபுணர் என்றும் கருதப்படும் டாக்டர் ஏ.கே. ஜோசப் அவர்களைச் சந்தித்தோம்:

டாக்டர், ஐ.யு.டி.யின் பாதக விளைவுகள் என்ன? ஏன்?

கர்ப்பப்பையில் துளைகள் விழுந்துவிடும். இதனால் கிருமித் தொற்று உண்டாகும். அதிகமான ரத்தப்போக்கு ஏற்படும். இவை ஏன் என்றால், அளவுக்குத் தகுந்த ஐயுடி (லூப்) தேர்ந்தெடுக்காமல் போவதுதான். அளவு பெரிதான ஐயுடியைப் பொருத்திக் கொண்டால் இந்த விளைவுகள் உண்டாகும். அதனால் தான் இதை முழுக்க முழுக்க நம்பகமானது என்று சொல்ல முடியவில்லை. மூன்று முதல் ஐந்து சதவிகிதம்வரை இதில் ஃபெய்லியர் ரேட் இருக்கிறது.

இப்போது 'மல்ட்டி லோட்' ஐயுடிக்கள் பலவித சைஸ்களில் வருகின்றன. கர்ப்பப்பையில் துளை விழாது. அதனால் கிருமி தொற்றலும் இல்லை. சில அரசாங்க மருத்துவமனைகளிலும் இப்போது மல்ட்டி லோட் கொடுக்கிறார்கள். காப்பர்–டி யைவிட மல்ட்டி லோட் நவீனமானது. காப்பர்–டி உபயோகிக்கும்போது கர்ப்பப்பையில் துளை விழுதல் அதிகம். உடம்பு ஏற்றுக் கொள்ளாமல் தள்ளிவிடக்கூடிய (ரிஜக்ஷன்) அபாயம் உண்டு. இதை வைத்துக் கொண்டும் கர்ப்பம் தரித்தவர் கொஞ்சம் அதிகம்தான்.

உடலுக்கு அளவான உடையைத் தேர்ந்தெடுப்பது போல்தான் இதுவும். பொருத்தமில்லாதவற்றைப் பொருத்திக் கொள்வதால் தொல்லைகள் தொடருகின்றன. தொல்லை

## வாரியார் முதல் சினிமாஸ்டார் வரை

மாநில குடும்ப நல விளம்பர அதிகாரி திரு கோ. ராதாகிருஷ்ணன் சில விவரங்கள் தந்தார்:

* குடும்ப நலக் கலை விழாக்கள் நடத்துகிறோம். கிராம மக்களுக்காகப் பட்டிமன்றம், கவியரங்கம், இலக்கியக் கருத்தரங்கம், இவை தவிர பள்ளி, கல்லூரி மாணவர்க்கான பேச்சுப் போட்டி, கட்டுரைப் போட்டிகள் வைத்துப் பரிசுகள் வழங்குகிறோம்.

* நாடகங்கள், கலை நிகழ்ச்சிகள் — கிருபானந்த வாரியார் காலட்சேபம் முதல் திரைக் கலைஞர்கள் பங்கு கொள்ளும் நிகழ்ச்சிகள் வரை — எந்தெந்த வகையில் குடும்ப நலக் கருத்துக்கள் பற்றி, கிராம மக்களுக்கும் நகர மக்களுக்கும் எடுத்துச் சொல்ல முடியுமோ அத்தனையும் செய்கிறோம்.

* மக்கள் கூட்டத்தில் வெறும் குடும்பக் கட்டுப்பாடு பிரசாரம் மட்டும் செய்யாமல், பொதுச்சுகாதாரம், சுத்தத்தின் அவசியம், தாய்–சேய் நலக் குறிப்புகள் ஆகியவற்றையும் எடுத்துச் சொல்லுகிறோம்.




குடும்ப நலத் தலைவர்கள் பயிற்சி முகாமில் பாரதி யார் பேசுகிறார்.

# முஸ்லீம்கள் ஏற்றுக் கொள்கின்றனர்



மதத்தைக் காரணம் காட்டி, முஸ்லீம் சமுதாயத்தினர் கு.க. திட்டங்களை ஏற்றுக் கொள்வதில்லையென்றும், இதனால் அந்தச் சமுதாயத்தினரின் எண்ணிக்கை அதிகமாகிக் கொண்டே வருகிறது என்றும் பரவலாகக் குற்றம் சாட்டப்படுகிறது. இது பற்றி முஸ்லீம் லீக் தலைவர் திரு அப்துல் சமத்தைப் பேட்டி கண்டபோது:

"இது போகிறபோக்கில் சுமத்தப்படுகிற ஆதாரமற்ற குற்றச்சாட்டு. மூன்றாண்டுகளுக்கு முன்னர் ராஜ்ய சபை உறுப்பினராயிருந்த நான், 'முஸ்லீம் சமுதாயத்தில் குடும்பக் கட்டுப்பாடு திட்டம் எடுபடுகிறதா?' என்று கேட்டபோது அப்போதிருந்த சுகாதார மந்திரி, 'முஸ்லீம்கள் அதிகமாக வாழும் ஜம்மு—காஷ்மீர் மாநிலத்தில் குடும்பக் கட்டுப்பாடு திட்டம் மிகச் சிறப்பாக அமுல் நடத்தப்படுகிறது' என்றார். இரண்டு வாரங்களுக்கு முன்னர் நமது சுகாதார மந்திரி ஹாண்டே அவர்களுடன் பேசிக் கொண்டிருந்தபோது, 'கு.க. முகாம்களுக்குத் தற்போது அதிக அளவில் முஸ்லீம் பெண்கள் வந்து கொண்டிருக்கிறார்கள்' என்றார்.

ஆனால் என்னுடைய தனிப்பட்ட கருத்தையும் கூற விரும்புகிறேன். குழந்தைச் செல்வம்தான் நாட்டின் செல்வம். இந்த கு.க. திட்டத்தால் எத்தனை டாக்டர்களை, விஞ்ஞானிகளை, அறிஞர்களை நாம் இழப்போம் என்று எண்ணிப் பாருங்கள். நபிகள் பெருமானார் 'வறுமைக்குப் பயந்து குழந்தைகளைக் கொல்லாதே' என்றார். குழந்தை பிறப்பதைக் கட்டுப்படுத்த ஆபரேஷன் ஒன்றுதான் வழியா? இயற்கையான வழிகள் எவ்வளவு இருக்கின்றன! நாங்கள் வருடத்தில் 45 நாட்கள் 'நோம்பு' இருக்கிறோம். இந்தக் காலத்தில் 'உறவு' வைத்துக் கொள்ள முடியாது. இது போல் பல நாட்கள் இருக்கின்றன. கு.க. திட்டத்தில் பெண்களை அதிகமாக ஈடுபடுத்துவதை நான் வன்மையாக எதிர்க்கிறேன். பலவீனமான இனம் என்பதாலா? முன்பெல்லாம் தாய்மார்கள் குழந்தை பிறந்தவுடன் தொடர்ந்து ஒரு வருடம் தாய்ப் பால் கொடுப்பார்கள். தாய்ப்பால் கொடுக்கும் காலத்தில் கருத்தரிக்க மாட்டார்கள். ஆனால் இப்போது குழந்தை பிறந்து வெகு சீக்கிரம் தாய்ப்பால் கொடுப்பதை நிறுத்தி விடுகிறார்கள். பொருளாதார நிலையைக் கணக்கெடுக்காத எந்தக் குடும்பமும் உருப்பட்டதில்லை. அப்படி கணக்கு பார்க்கிற பெற்றோர் குழந்தைகளையும் கட்டுப்படுத்திக் கொள்வார்கள். வற்புறுத்தல், திணித்தல் என்பதெல்லாம் கூடாது."

கள் இல்லாத பட்சத்தில், எத்தனை வருஷங்கள் வேண்டுமானாலும் லூப்பை உள்ளே வைத்திருக்கலாம்.

டாக்டர், இந்த அவஸ்தைகளை எல்லாம் பெண்கள் மட்டுமே பட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆண்கள் ஏன் அறுவை செய்து கொள்ளக் கூடாது?

ஆண்கள் 'வாஸெக்டமி' ஆபரேஷன் செய்து கொள்ளாததற்கு முக்கிய காரணம் மனம் சம்பந்தப்பட்டது. ஆபரேஷன் செய்து கொண்டால் தாங்கள் ஆண்மை இழந்து விடுவோம், எழுச்சி இருக்காது என்றெல்லாம் தவறான நினைப்புகள். அதனால் தங்கள் மனைவிகளைத் தள்ளிவிட்டு விடுகிறார்கள் ஆபரேஷன் செய்து கொள்ள.

டாக்டர், வாக்ஸின் ஊசி மூலம் கருத்தடை செய்யும் ஆராய்ச்சிப் பணியில் இப்போது மனிதர்களிடம் பரிசோதனைகள் செய்யும் அளவுக்கு வந்திருக்கிறதாமே? எதற்கு இந்த அவஸ்தை, ஆபத்து எல்லாம்?

மிருகங்களிடம் இதைப் பரிசோதனை செய்து பார்த்து, அவற்றில் வெற்றி கண்ட பிறகே,மனிதர்களிடம்வருவார்கள்.அதனால், இதில் பயப்பட ஒன்றுமில்லை. இந்த ஃபீல்ட் ட்ரயல்களில் தேவையான அளவுக்கு ஜாக்கிரதையாகவே இருப்பார்கள். மனிதர்களிடம் பரிசோதித்துப் பார்க்காமல், பிறகு எப்படி வெகு ஜன உபயோகத்துக்குக் கொண்டு வருவது?

ஒருநாளைக்குமுந்நூறுலேப்ரோஸ்கோபி ஆபரேஷன் எல்லாம் சாத்தியமா டாக்டர்?

நிச்சயம் இது கூட்டிச் சொல்லப்பட்ட எண்ணிக்கைதான். நூறு ஆபரேஷன்கள் என்பதுதான் அதிகபட்சமாக இருக்க முடியும். வேலூரில் அரசாங்க பெண்ட்லெண்ட் ஆஸ்பத்திரியில் 1980ல் பத்து டாக்டர்கள் 240 கேஸ்கள் பார்த்தார்கள். நமது மாநிலம்தான் இதை முதலில் சாதித்தது. எத்தனை பாதுகாப்பு, எத்தனை பராமரிப்பு ஏற்பாடுகள் செய்தோம் அப்போது! இப்படி காம்ப்

கள் நடத்துவதில் தவறில்லை. ஆனால் வேண்டிய முன்னேற்பாடுகள் செய்கிறோமா என்று பார்ப்பது முக்கியம். இது தவிர ஆபரேஷனுக்கு வருகிறவரை சரியாகப் பரிசோதிக்க வேண்டும். ஆபரேஷன் போது கவனமாக இருந்தால் போதாது. ஆபரேஷனுக்குப் பிறகும் கவனிப்புத் தேவை. அது மிக முக்கியம். அதுதான் இந்த மாதிரி காம்ப்களில் அறவே கிடையாது. அப்படியே இருந்தாலும், அதை ஜூனியர் டாக்டர்களிடம் விட்டு விடுகிறார்கள். அவர்களுக்கு இதில் ஈடுபாடு இல்லாததால் அக்கறை இருப்பதில்லை என்பது மட்டுமல்ல, ஏன் வலிக்கிறது, காரணம் என்ன என்றெல்லாம் அவர்களால் ஆராய முடிவதில்லை. இதையெல்லாம் தவிர்க்க முடிந்தால் தவறுகள் நேர வாய்ப்பில்லை. தனியார் மருத்துவமனைகளில் உள்ள வசதிகளைப் பயன்படுத்திக் கொண்டு கு.க. சிகிச்சை செய்து கொள்ளலாம் என்று அரசு சலுகை அளித்தது. ஆனால் சேலத்தில் கு.க. சிகிச்சை அளித்த இரண்டு நர்ஸிங் ஹோம்களுக்கு ஆயிரக்கணக்கில் இன்னும் அரசிடமிருந்து பணம் வந்தபாடில்லை என்று கேள்விப்பட்டேன்.....

டாக்டர் சொல்வதிலிருந்து சில கேள்விகள் எழுகின்றன:

லூப், காப்பர்-டி போன்றவற்றைப் பெண்களுக்குப் பொருத்தும்போது அளவு சரியாக இல்லையென்றால் பெண்களுக்கு சொல்லொணாத் துன்பம் உண்டாகும்; இது மாணவாரியாகப் பொருத்தப்படும்போது இதில் எந்த அளவுக்குக் கருத்துச் செலுத்தப்படுகிறது? பின்னால் பெண்களுக்குத் துன்பம் நேரும்போது 'இது லூப்பினால் ஏற்பட்ட துன்பம்' என்று எத்தனை புள்ளி விவரங்கள் சேகரிக்கப்பட்டுள்ளன? வெட்கப்பட்டுக் கொண்டே வெளியே சொல்லாமல் அவதிப்படும் பெண்கள் எத்தனை பேர்? கு.க. மாத்திரைகளை முழுங்கிவிட்டு உடல் பருத்து மனம் சஞ்சலமடையும் பெண்கள் எத்தனை ஆயிரம்?

ஆபரேஷனுக்குப் பிறகு போதிய கவனிப்புப் பெற்றால் ஆண்கள் வாஸெக்டமி செய்து கொள்வதே மிக எளிதான கு.க. முறை. அவர்களின் சுயநலம்தான் இதைத் தவிர்க்கிறது. 'காண்டோம்' எனப்படும் உறை பயன்படுத்துவது அதைவிட எளிது. இதில் நோய்த் தடுப்பும் உண்டு. ஆனால் ஒரு தடவைக்கு மேல் உபயோகிக்கக் கூடாது என்பது வலியுறுத்தப்பட வேண்டும். இவற்றைப் பிரசாரப் படுத்தாமல் பெண்கள் ஏன் துன்பப்படுத்தப்பட வேண்டும்? எதற்காக மனிதர்கள் பரிசோதனைச் சாலை முயல்களைப் போல் புதிய புதிய வாக்ஸின் மருந்துகளை ஏற்றிக் கொள்ள நிர்ப்பந்திக்கப்பட வேண்டும்? எதற்காகக் கருச் சிதைவு என்ற கொலை பாதகம் அனுமதிக்கப்பட வேண்டும்?

**— சாருகேசி, கௌசல்யா.**

படங்கள்:
**மாநில குடும்பநல இயக்கம்;**
**சுபா.**

பஞ்சாப் ஆட்சி

அங்கே அவர் செருப்பைத் தூசு தட்ட, இங்கே நாற்காலி 'பள பள'க்குதே! வயிறு எரியுது!

பாதல்

டோரா




ரத்தத்தின் ரத்தமே! தமிழ் நாட்டில் குடி நீருக்கு வறட்சி! அந்த வறட்சிக்கு வறட்சி உண்டாக்கி வட்டார வரைபடம் தயாரித்து, திட்டம் தீட்டி, குடி நீர்க் குழாய்கள் அமைத்து, சொட்டாக் கொட்டும் குடிநீர், சுவை நீர் என்றாக்கி, ஏழை களின் வாழ்க்கும் குடிநீர்! குடி நீர்ப் பஞ்சம் என்று சொல்லி அவர்கள் போராட்டம் நடத்த வாய்ப்பளிக்காமல்.. ஹும்.. ம்ம்.. ஹூம்.








# கல்கி

1986 ஜூன் 1
மலர் 44 இதழ் 44
அக்ஷய வைகாசி 18




# பொறுத்தது போதும்; பொங்கி எழுங்கள்!

யாழ்ப்பாணத்தின் மீது ஸ்ரீலங்கா விமானப்படையினரின் ஹெலிகாப்டர்களும் விமானங்களும் குண்டு மழை பொழிகின்றன; ஆஸ்பத்திரிகள் அழிக்கப்படுகின்றன; பெண்கள் மடிகின்றனர்; குழந்தைகள் கொல்லப்படுகின்றன. ஈழப் போராளிகளுடன் யுத்தம் செய்வதாகக் கூறிக் கொண்டு ஜெயவஞ்சன அரசு ஒரு பாவமும் அறியாத அப்பாவி மக்களைக் கொன்று குவிக்கிறது. அரக்கத்தனமாக நடந்து கொள்கிறது. 'புராணத்தில் பார்த்த கம்சனும் சமீபத்திய ஹிட்லரும் என்னிடம் பிச்சை வாங்க வேண்டும்' என்று கூறாமல் கூறுகிறார் ஜெயவஞ்சன.

போர் நிறுத்தம், பேச்சு வார்த்தை, புதிய யோசனைகள் என்று சொல்லிக் கொண்டே, அந்தத் திரைகளின் மறைவில், ஈழப் போராளிகளை அழித்து விடலாம்; கொஞ்சம் அவகாசம்தான் தேவை என்று திட்டம் போட்ட ஜெயவஞ்சன, அது நிறைவேறாமல் போகவே, ஆத்திரமடைந்து விமானப்படையை ஏவி தமிழர்களைக் கொல்கிறார்; அவர்களின் வீடு வாசல்களை அழிக்கிறார். நியாயம் கேட்டு நிருபர்கள் அணுகும்போது பஞ்சாப் பிரச்னையை இழுக்கிறார். பஞ்சாபில் சீக்கியர்களுக்குச் சம அந்தஸ்து வழங்கப்படுகிறது; ஜனநாயக முறையில் தேர்தல் நடந்து சீக்கியரே ஆட்சியில் உள்ளனர் என்பதையும் இதற்கு நேர்மாறாக ஈழத் தமிழரில் பல்லாயிரக்கணக்கானோருக்குப் பிரஜா உரிமையே மறுக்கப்படுகிறது; அவர்களுடன் அவர்களுடைய தாய்மொழியும் சம அந்தஸ்து தரப்படாமல் அவமதிக்கப்படுகிறது என்பதையும் ஜெயவஞ்சன அறியாதவரல்ல; உலகை ஏமாற்றப் பார்க்கிறார்.

பாரதப் பிரதமர் நடந்து கொள்கிற விதமோ நம் இதயத்தை உடைப்பதாக இருக்கிறது. லிபியாவைத் தாக்க ரேகன் விமானங்களை ஏவிய போதும், தென் ஆப்பிரிக்கா சமீபத்தில் ஜாம்பியா, ஜிம்பாப்வே, போட்ஸ்வானா நாடுகள் மீது குண்டு மழை பொழிந்த போதும் ராஜீவ் காந்தி காட்டிய ஆத்திரத்தைக் கூட யாழ்ப்பாணம் மீது ஸ்ரீலங்கா அரசு நடத்திய குண்டுவீச்சையொட்டி வெளிப்படுத்தாதது ஆச்சரியமளிப்பதுடன் வேதனையையும் உருவாக்குகிறது. கோபத்தையும் அதிருப்தியையும் வன்மையான விதத்தில் வெளிக்காட்ட வேண்டிய தருணத்தில் காட்டாமல் போவது பலவீனமாகக் கருதப்படும் என்பதை ராஜீவ் மறக்கலாமா? யாழ்ப்பாணம் வேறு நாடல்ல; இலங்கையின் ஒரு பகுதியே என்பது உண்மை. ஆனால் அங்கு மடிகிறவர்கள் தமிழர்கள்; நம் சகோதரர்கள். பாரதத்திலிருந்து அங்கே போய்க் குடியேறியவர்கள். ஆயிரம் ஆண்டுகளாக வம்சாவழியாக இருப்பவரும் உண்டு; பிழைப்புக்காகச் சமீப காலத்தில் சென்றவரும் உண்டு. ஈழப் பிரஜைகளான பிறகும் அவர்கள் தமிழர்களே; பிரஜா உரிமை கிட்டாதவர் பாரத நாட்டினரே.

எனவே யாழ்ப்பாணத்தின் மீது ஸ்ரீலங்கா விமானப்படை குண்டு வீசுவதற்கும், புதுதில்லி மீது வீசுவதற்கும் அதிகமான வித்தியாசம் ஏதுமில்லை. ஸ்ரீலங்கா ராணுவத்தினரால் ஈழத் தமிழர் — பொதுமக்கள் — கொல்லப்படுவது இந்தியப் பொதுமக்கள் கொல்லப்படுவதற்கு ஒப்பானதே.

மத்திய அரசு, தன்னை யாரோ மூன்றாவது மனிதர் போலவும் யாரோ இரு தரப்பினருக்கிடையே உள்ள பூசலைத் தீர்த்து வைக்க மத்தியஸ்தம் செய்வது போலவும் நடந்து கொள்கிற போக்கை இனியேனும் கைவிடட்டும். இது இந்தியாவுக்கும் இலங்கைக்கும் இடையில் உள்ள பிரச்னையாகக் கருதி நேரடியாகப் பேச்சு வார்த்தை நடத்தி, 'என்ன சொல்கிறீர்கள்? உண்டா, இல்லையா?' என்று தட்டிக் கேட்கட்டும். ஸ்ரீலங்கா அரசை மட்டுமல்ல, ஈழப் போராளிகளிடமும் கண்டிப்புக் காட்டலாம். அதற்கு மத்திய அரசுக்கு உரிமை உண்டு. ஆனால் இன்றுள்ள மத்திய அரசின் ஏனோதானோ மனப்பான்மை மடிய வேண்டும்; வழவழ போக்கு வழித்து எறியப்பட வேண்டும்.

ராஜீவ்! உங்களை உசுப்பி விட்டுக் கொள்ளுங்கள்! நல்லவர் என்று பெயர் வாங்கினால் போதாது; வல்லவர் என்றும் பெயர் எடுக்க வேண்டிய சந்தர்ப்பங்கள் உண்டு! குரலை உயர்த்துங்கள்; பலத்தை உணர்த்துங்கள்! இல்லையேல் ஜெயவஞ்சன தொடர்ந்து வெற்றிகரமாகப் பாரதத்தை ஏமாற்றிக் கொண்டிருப்பார்!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்.



• "லஞ்ச ஊழலை ஒழிக்க மந்திரிகளும் எம்.எல்.ஏ.க்களும் முன்னுதாரணமாகத் திகழ வேண்டும்" — மஹந்தா.

# "அஸ்ஸாம் ஒப்பந்தம் ஓர் அரசியல் மிட்டாயா?"

**— அஸ்ஸாம் முதல்வர் மஹந்தா பேட்டி**

**(சென்ற இதழ் தொடர்ச்சி)**

கேள்வி: "கலாசார அமைச்சர் என்ற முறையில் கலைகளை வளர்க்க என்ன திட்டம் வைத்திருக்கிறீர்கள்?"

பதில்: "தற்சமயம் ஒரிஸ்ஸா, திரிபுரா மாநிலங்களில் கலாசாரப் பரிவர்த்தனைக்கு ஏற்பாடு செய்திருக்கிறோம். மற்ற மாநிலங்களிலிருந்தும் கலைஞர்களை அழைப்போம். கலைகளுக்கு ஆதரவு அளிப்போம். ஆனால் தாமதமாகும். இப்போது தொழில்,பொருளாதார முன்னேற்றத்தில் கவனம் செலுத்துவது தான் முக்கியம்."

கேள்வி: "ராஜீவ் காந்தியைப் பற்றி உங்கள் அபிப்பிராயத்தைக் கூறுவீர்களா?"

பதில்: "அஸ்ஸாம் பிரச்னையில் அவர் கவனம் செலுத்தி ஒரு தீர்வு காண வழி வகுத்தார். அந்த அளவில் அவருடைய பெருந்தன்மையைப் பாராட்டுகிறோம். ஆனால் ஒன்று, எங்கள் கட்சி மாநிலக் கட்சி. டெல்லியிலிருந்து வரும் ஆணைகளை நிறைவேற்றிக் கொண்டிருக்க மாட்டோம். எங்களுக்கு அஸ்ஸாமின் முன்னேற்றம்தான் முக்கியம். அதற்காக மத்திய அரசுடன் இன்னும் பல விவாதங்களும் போராட்டங்களும் நடத்த வேண்டியிருந்தால் தயங்க மாட்டோம்."

கேள்வி: மத்திய அரசுடன் நீங்கள் செய்து கொண்ட ஒப்பந்தத்தை அஸ்ஸாமிய மக்கள் எவ்வாறு வரவேற்கிறார்கள்?

முதல்வர்: அஸ்ஸாமிய மக்கள் இந்த உடன்பாட்டைக் குறித்து மகிழ்ச்சி அடைந்திருக்கிறார்கள். அஸ்ஸாமின் அன்னிய நாட்டினர் பிரச்னையைத் தீர்க்க ஒரு வழி ஏற்படும் என்ற நம்பிக்கை பிறந்திருக்கிறது. மாநில முன்னேற்றத்துக்கு அத்யாவசியமான நடவடிக்கைகள் பல தொகுதிகளிலும் எடுக்கப்படும் என்ற நம்பிக்கையும் ஏற்பட்டிருக்கிறது. எங்கள் மாநிலத்தில் ஆறு ஆண்டுகளாக நிலவி வந்த நிச்சயமற்ற நிலை, கொந்தளிப்பு, மனக் குமுறல் இவற்றுக்கும் ஒரு முடிவு ஏற்பட்டிருக்கிறது. எனவே மக்கள் மகிழ்ச்சி அடைந்துள்ளனர்.

கேள்வி: சில அரசியல்வாதிகள் "அஸ்ஸாம் ஒப்பந்தம் ஓர் அரசியல் மிட்டாய்' என்று வர்ணித்திருக்கிறார்களே. நீங்கள் பூரண திருப்தி அடைந்திருக்கிறீர்களா?

• அன்னை காமாக்யா வித்யா பீடத்திலிருந்து அருளாட்சி புரியும் பிரதேசம் அஸ்ஸாம்



முதல்வர்: நாங்கள் உண்மையாகவே திருப்தி அடைந்திருக்கிறோம். எங்களை விமர்சிக்கும் அரசியல் எதிரிகள் என்ன வேண்டுமானாலும் சொல்லிக் கொண்டு போகட்டும்.

கேள்வி: உங்கள் அரசு புதிதாக அமைக்கப்பட்டது என்பதோடு எல்லா மந்திரிகளும் இளைஞர்களாக இருக்கிறார்களே. இது அனுகூலமானதா?

முதல்வர்: மந்திரிகள் வாலிபர்களாக இருக்கலாம். அரசியலுக்குப் புதியவர்களாகவும் இருக்கலாம். ஆனால் அவர்கள் சுறுசுறுப்பானவர்கள். நேர்மையானவர்கள். அரசாங்க நடைமுறைகளை விரைவில் கற்றுக் கொண்டு விடுவார்கள். அந்தரங்க சுத்தியும் நேர்மையுமே மக்கள் சேவைக்கு முக்கிய தேவை என்று நாங்கள் கருதுகிறோம்.

கேள்வி: இரண்டு முக்கியமான எதிர்க் கட்சிகள் உள்ளன. ஒன்று காங்கிரஸ் (இ). இன்னொன்று யு.எம்.எஃப். புதிய அரசாங்கம் பற்றி இவர்களுடைய கணிப்பு என்ன?



• அஸ்ஸாமிய கைவினைஞரின் தயாரிப்பில் அற்புதமான மேஜை விளக்கு

முதல்வர்: அவர்கள் எங்களுடைய செயல் திறனையும் நேர்மையையும் அறிந்தே இருக்கிறார்கள். இன்று அமைந்துள்ளதுதான் மெய்யான மக்கள் அரசு என்பதை உள்ளுக்குள் ஒப்புக் கொள்ளவும் செய்கிறார்கள். ஆனால் அரசியல் காரணங்களுக்காகவும் உள் நோக்கங்களுக்காகவும் எதிர்க்கட்சிகள் வழக்கமாக நடந்து கொள்வது போல எதிர்க்க வேண்டும் என்ற ஒரே காரணத்துக்காக எதிர்க் கட்சியாகச் செயல்படுகிறார்கள்.

கேள்வி: மத்திய அரசின் ஒத்துழைப்பு அல்லது ஒத்துழையாமையைப் பற்றி ஏதேனும் ஒரு குறிப்பிட்ட சம்பவத்தைக் கூற முடியுமா?

முதல்வர்: இதுவரை மத்திய அரசாங்கம் எங்கள் விஷயத்தில் பரிவோடு ஒத்துழைத்து வந்திருக்கிறது. எங்களுடைய எல்லாக் கோரிக்கைகளுக்கும் சாதகமாகவே நடந்து கொண்டிருக்கிறது.

கேள்வி: ராஜீவ் காந்தியைப் பற்றி உங்கள் கருத்து என்ன? (அரசியலை ஒதுக்கிய நிலையில்)

முதல்வர்: அவர் எங்களிடம் நட்புக் காட்டி வரும் ஒரு பண்புமிக்க மனிதர்.

கேள்வி: என்.டி.ஆர். உங்களை ஆதரித்ததன் நோக்கம் என்னவாக இருக்கும்?

முதல்வர்: என்.டி.ஆர். மட்டும் எங்களை ஆதரிக்கவில்லை. எல்லா மாநிலங்களையும் சேர்ந்த மக்களை எங்கள் நண்பர்களாக மதிப்பது போலவே ஆந்திர மக்களையும் நண்பர்களாகக் கருதுகிறோம். அஸ்ஸாம் மாநில மக்கள் நமது பாரத நாட்டின் வளர்ச்சியில் எல்லாப் பிரதேச மக்களுடனும் சமமாகப் பங்கேற்க விரும்புகிறார்கள். ஆகவே பரஸ்பர நல்லெண்ணமும் ஒத்துழைப்பும் நமக்குள் இன்றியமையாதது.

கேள்வி: அஸ்ஸாம் இயக்கம் மாணவர் இயக்கமானதால் எத்தனையோ பேர் பல ஆண்டுப் படிப்பை இழந்திருப்பார்களே. அவர்களுடைய நிலை என்ன?

முதல்வர்: அரசாங்க ஊழியர்களாக நியமிக்கப்படும் இளைஞர்களுக்கு நாங்கள் ஆறு ஆண்டுகள் வயது வரம்பைத் தளர்த்தி இருக்கிறோம். எல்லா மாணவர்களும் கல்லூரிப்

படிப்பைத் தொடரத் தொடங்கிவிட்டதால் இப்போது நிலைமை சரியாகிவிட்டது. அவர்கள் அனைவருக்கும் ஒளி மயமான எதிர்காலம் அமையும் என்று நான் ஆர்வத்தோடு எதிர்பார்க்கிறேன்.

கேள்வி: இவ்வளவெல்லாம் நடந்த பிறகு, உங்கள் அரசு மதச் சார்பற்ற அரசாகத் திகழுமா? அது சாத்தியமா?

முதல்வர்: எங்களுக்கு வகுப்பு வாதக் கொள்கையே கிடையாது. ஜாதி மத பேதங்களை ஒழித்து ஒற்றுமையை நிலை நாட்ட நாங்கள் அயராது முயற்சி செய்வோம்.

கேள்வி: லஞ்ச ஊழலை ஒழிக்க வேண்டும் என்று சொல்வது சுலபம். இதை எவ்வாறு செயல்படுத்துவீர்கள்?

முதல்வர்: முதலில் மந்திரிகளும் சட்ட சபை அங்கத்தினர்களும் முன் உதாரணமாக இருந்து காட்ட வேண்டும். அப்போது பொது வாழ்க்கையில் எல்லோரையும் பின்பற்றச் செய்வது சுலபமாகிவிடும். லஞ்ச ஊழலைத்தவிர்ப்பதுமேலேஇருந்துதொடங்க வேண்டும். நாங்கள் அதைத்தான் செய்கிறோம். சுத்தமான (நேர்மையான) ஆட்சியை மக்களுக்குத் தருவதே எங்கள் அரசின் நோக்கம். இதில் நாங்கள் மிகவும் கவனமாக இருந்து வருகிறோம். இதுவரை நல்ல பலன் உண்டாகியிருக்கிறது. கடந்த சில ஆண்டுகளாக நடந்து வந்த வெட்கமற்ற கட்டுப்பாடில்லாத லஞ்ச ஊழலை நாங்கள் கட்டுப்படுத்தியிருக்கிறோம்.

கேள்வி: ஆஸுவுக்கு ஏன் அவ்வளவு எதிர்ப்பு இருந்தது? நெல்லியில் நடந்த வன்முறைச் சம்பவங்களுக்கு அதிக முக்கியத்துவம் தரப்பட்டதே. மாணவர்கள் வன்முறையில் ஈடுபடக் காரணம் என்ன?

முதல்வர்: அவ்வளவு எதிர்ப்பு இல்லாமலிருந்திருந்தால் ஆறு நீண்ட ஆண்டு காலம் ஆஸு போராட வேண்டியிருந்திருக்காது. நெல்லியில் நடந்த வன்முறைச் சம்பவங்கள் அதிகமான விளம்பரத்தைப் பெற்றன என்பதோடு ஆஸுவைப் பற்றிப் பொது ஜனங்களிடையே தவறான அபிப்ராயம் ஏற்பட வேண்டும் என்பதற்காகவே உண்மைக்குப் புறம்பாகவும் திரித்தும் செய்திகளை வெளியிட்டார்கள். ஆஸு கிளர்ச்சி காலத்தில்கூட எப்போதும் அஹிம்ஸைக் கொள்கையையே கடைப்பிடித்து வந்திருக்கிறது.

கேள்வி: உங்கள் புதிய கட்சியான அஸ்ஸாம் கண பரிஷத் வருங்காலத்தில் ஒற்றுமையாக இருக்குமா? ஏற்கெனவே அதிருப்தியும், உட்பூசல்களும் இருப்பதாகத் தெரிகிறதே. அஸ்ஸாம் பழங்குடி மக்கள், 'இந்த அரசு ஜாதி இந்துக்களின் அரசு' என்று வர்ணிப்பதாகக் கூறப்படுகிறதே?

முதல்வர்: ஏ.ஜி.பி.யில் உட்பூசல்கள் இல்லை. எங்கள் கட்சி இன்னும் அதிக ஒற்றுமையோடும் அதிக பலத்தோடும் தொடர்ந்து நிலைபெற்றிருக்கும். கிளர்ச்சி நடந்த காலத்தில் பழங்குடியினர் எங்களை ஆதரித்து வந்தது போலவே இப்போதும் ஆதரவு காட்டி வருகிறார்கள். பழங்குடி மக்களின் பிரதிநிதிகள் பலர் சட்ட சபையிலும் மந்திரி சபையிலும் இடம் பெற்றுள்ளார்கள்.

கேள்வி: அஸ்ஸாம் ஒப்பந்தத்தின் முக்கியமான அம்சத்தை நீங்கள் எவ்வாறு நிறைவேற்றப் போகிறீர்கள்? இங்கு குடியேறிய மக்களை பங்களாதேஷ் நிச்சயமாகத் திரும்ப அழைத்துக் கொள்ளப் போவதில்லை. உங்கள் செயல்முறை என்னவாக இருக்கும். இந்த ஜனங்களிடம் பரிவோடு நடந்து கொள்வீர்களா?

முதல்வர்: மத்திய அரசின் உதவியோடு இந்தத்திட்டத்தைநிறைவேற்றுவோம். அயல் நாட்டிலிருந்து வந்து அனுமதியின்றிக் குடியேறிய மக்களை வெளியேற்றுவதற்கு மத்திய அரசின் உதவி தேவை. இவ்விஷயத்தில் மத்திய அரசு நிச்சயம் உதவி செய்யுமென்று எதிர்பார்க்கிறோம்.

பேட்டி: ஆனந்தி



''எங்க ஆபீஸ் ஸ்டாப் எல்லாரும் 'பஞ்சுவாலிடி'யை நல்லா கடைபிடிக்கறாங்க...''

''பலே... பெருமைப்படவேண்டிய விஷயம்தான்...''

''நீங்க ஒண்ணு... சாயந்திரம் ஆபீஸ் விட்டு வீட்டுக்குத் திரும்பிப் போற விஷயத்தில் மட்டும் சொல்றேன்!''

# பீடங்கள்

வையவன்

நாளைக்கும் அவன் வருவான். இதே பஸ் ஸ்டாப்பிற்கு. இதே நேரத்துக்கு. அவனுக்குப் பயந்துகொண்டு தான் ஒரு ஸ்டேஜ் அதிகமானாலும் ஆகட்டும் என்று ஸ்டெல்லா வழக்கமாக அவள் பஸ் ஏறுகிற ஸ்டாப்பை விட்டுக்கால்வலியைப்பொருட்படுத்தாமல் ஒரு ஸ்டாப்பிங் முன்தள்ளி நடந்து போய்க் காத்திருப்பாள். அங்கேயும் தேடிக் கொண்டு வந்து விட்டான்.

''நாளைக்கு வருவேன். ஃப்ரண்டோட கார் கேட்டிருக்கேன். ஓ.கே! பி பாஸிடிவ்.''

நாலைந்து வார்த்தைக்கு ஒரு தரம் நரேஷ்ஒருநிமிண்டல்மாதிரி, செல்லமாகக்கிள்ளுவது மாதிரி ஒரு சின்னச் சிரிப்பு சிரிப்பான். அந்த உயரம், சிவப்பு, அநாயாசமாக உடை அணிந்திருப்பது போலக் காட்டக் கவனத்



தோடு தேர்ந்தெடுத்த டிரஸ்ஸின் கலர் செலக்ஷன். மென்மையாகவீசும்செண்ட்டின் நறுமணம்...

எல்லாவற்றோடும் நாளைக்கும் அவன் வருவான். ஸ்கூட்டரில் அல்ல; காரில்.

''ஜீசஸ்'' என்று மனத்திற்குள் முணு முணுத்து மனத்திற்குள்ளிருந்தே சிரசுக்கும் தோளுக்குமாக ஒரு சிலுவை வரைந்து கொண்டாள் ஸ்டெல்லா.

நரேஷைச் சந்திக்கத் தொடங்கியதி லிருந்து இப்படி 'க்ராஸ்' போட்டுக் கொண் டாலும் தான் ரட்சிக்கப்படப் போவதில்லை என்ற ஒரு மங்கலான பயம் அவளைப் பிடித்துக் கொண்டது. கம்போஸிங் செக்ஷ ன்னில் ''என்ன ஒரு மாதிரி இருக்கீங்க ஸ்டெல்லா... துபாய்லேருந்து ஹஸ்பெண்ட் லெட்டர்போடலியா...?'' என்று இரண்டுக்கு மூன்று தடவை நாலைந்து, சக கம்போஸிங் பெண்கள் கேட்டுவிட்டார்கள்.

''ஒண்ணுமில்லே... ஜஸ்ட் ஸ்மால் ஒர் ரீஸ்...''

அவர்களிடம் மழுப்ப முடிந்த மாதிரி இரவு ஏழு மணிக்கு நாள் தவறாமல் டீ.வி. பார்க்க வருகிற அகிலாவிடம் முடியவில்லை.

''ஆன்ட்டி... சம்திங் மிஸ்ஸிங்... ஒங்களுக் குள்ளே என்னமோ கவலே.''

''ஒண்ணுமில்லே.. நீயா கற்பனே பண்ணிக் கறே அகில்!''

''நான் ஒரு மனோதத்துவ மாணவி! எங் கிட்டே நீங்க ஏமாத்த முடியாது!''

''நான் ஒனக்கு சைகாலஜி ட்யூஷன் எடுக் கலே. இங்கிலீஷ்தான் சொல்லித் தர்றேன். ஸோ... நீ பாட்டுக்கு இஷ்டம் போல் கற் பனே பண்ணிட்டு ஸைகாலஜியிலே கோட்டை விட்டுடப் போறே... பி கேர் ஃபுல்.''

''நோ, நோ, நோ... நீங்க பேச்சை மாத்த றீங்க. ஸம்திங் டிஸ்டர்ப்ஸ் யூ!''

சாதாரணமாக ஸ்டெல்லா கவலைப் பட்டு யாரும் பார்த்ததில்லை. போன மாதம் அவள் மகன் மோசஸுக்கு டிப்தீரியா வந்து ஒரு வாரம் ஆஸ்பத்திரியில் அட்மிட் ஆகி விட்டான். அவள் கணவன் ஜோசப் இருந் தால் கூடத் துடித்து விட்டிருப்பான். ஆனால் ஸ்டெல்லாதான் அந்த ஐந்து வயதுப் பையனுக்கு மருத்துவம் பார்க்கிற டாக்டர் மாதிரி தைரியமாக இருந்தாள்.

''தேவனுடைய கிருபையும், உன் தைரிய மும்தாண்டியம்மா மோசஸைக் காப்பாத் துச்சு'' என்று மோசஸை நலமாக்கி வீட் டுக்கு அழைத்து வந்ததும் மாமியார் ஞான மேரி மெச்சிக் கொண்டாள்.

''ஆண்ட்டி... யூ ஆர் எ டெவில்! வெறும் டெவில் இல்லே. டேர் டெவில்!'' என்று நிந்தாஸ்துதி பண்ணினாள் அகிலா.

''உன் தைரியத்தைப் பார்க்கறப்ப எங்க வீட்டுக்காரர் ஞாபகம் வருது. பிரான்சிஸ் அச்சு ஒன்ன மாதிரியேதான்! எதுக்கும்; கவலைப்பட மாட்டாரு'' என்று மாமியார் தன் காலஞ்சென்ற கணவரைப் பற்றி ஒரு பாராட்டுரை வாசித்தாள்.

அன்று ஸ்டெல்லா வெள்ளையாகச் சிரித் தாள். அந்த மெச்சல்களுக்கும் தனக்கும் சம்பந்தமில்லை என்பது போல.

ஜோசப்புக்குக் கூட ஸ்டெல்லா மீது அதே அபிப்பிராயம். இது அவள்மேல் ஒரு நம்பிக்கையாக வளர்ந்துவிட, அந்த நம்பிக் கையைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்று அவள் மும்முரமாக முயல —

திடீரென்றுஒருநாள் தன் ஏர்கண்டிஷனிங் & ரெப்ரிஜிரேஷன் தொழிலுக்குத் துபாயில் ஏகப்பட்ட கிராக்கி என்று ஆரம்பித்தான்.

''மாசத்துக்குப் பத்தாயிரம் கெடைக்கும்! நெனச்சுப் பாரு டென் தவுஸண்ட். செலவு எல்லாம் போக ஆறு ரூபா நின்னுக் கூட வருஷத்துக்கு எழுபத்தைஞ்சு கிட்டத்தட்ட தேத்திடலாம். அஞ்சு வருஷம் இருந்தா போதும், போகட்டுமா?''

''என்ன விளையாட்றீங்களா?''

''பாஸ்போர்ட் வாங்கி ஏஜண்ட்கிட்டே கொடுத்தாச்சு.''

அப்போதும் ஸ்டெல்லா கவலையைக் காட்டிக் கொள்ளவில்லை.

ஜோசப்புக்காவது துபாய் போகிற தைரியம் வருவதாவது? என்றுதான் விட்டு விட்டாள்.

ஆர்டர் வந்து, அவன் பம்பாயில் கப்ப லேறும்போது கூட ஸ்டெல்லா சிரித்துக் கொண்டே விடைகொடுத்தாள். என்றைக் கும் அவன் பார்க்காத அழுகையையும் கவலை யையும் ஒரு நிச்சய முடிவில் கப்பலேறும் போது கண்டு அதை ஏன் சுமந்து செல்ல வேண்டும் என்று ஒன்றையும் காட்டிக் கொள்ளவில்லை.

எல்லோரும் சொல்லிச் சொல்லித்தான் கவலைப்படாமல் இருக்கிறது ஒரு பீடம்; அதைக் காப்பாற்றிக் கொள்வது ஒரு பீடம் என்று ஒரு நிர்ப்பந்தம் வந்துவிட்டது.

அகிலாவிற்கு எல்லாம் தெரியும். ஜோசப் எழுதுகிற கடிதங்கள்; அதற்கு இவள் போடு கிற பதில்கள். அவன் சம்பாத்தியம், சேமிப்பு, வாங்கி வருகிற இம்போர்ட்டட் சாமான்கள் எல்லாம் தெரியும். இரண்டு பிளாட்கள் விற்பனைக்கு வந்திருப்பதாக நரேஷ் வந்து சொன்னது கூடத் தெரியும்.

''இவர் யாரு ஆன்ட்டி? ப்ளாட் புரோக் கரா? சினி ஆர்ட்டிஸ்டா...?''

''ஏன்...? ப்ளாட் புரோக்கர்...''

''இல்லே... ஹிந்தி ஃபிலிம் ஆக்டர் மாதிரி சல்லுனு ட்ரஸ் பண்ணிட்டு ஜிலுஜிலுன்னு செண்ட் வேற பூசிக்கிட்டு வர்றாரேன்னு கேட்டேன்.''

அகிலா பருவத்துக்கு வந்து விட்டவள். அதனால் ஸ்டெல்லா நரேஷ் பெயரையே அவளிடம் எடுப்பதில்லை. ப்ளாட் வாங்கி ரிஜிஸ்ட்ரேஷன் எல்லாம் முடிகிற வரை கூட அவன் தன் வீட்டுக்கு வருவதைச் சாமர்த் தியமாகத் தவிர்த்து விட்டாள்.

மாமியாருக்கும் மகனுக்கும் இல்லாத ஒரு தனி ஸ்தானத்தை அகிலாவுக்கு வழங்கியிருந் தாள்ஸ்டெல்லா. அவளோடுதான்ஷாப்பிங்;

அவளோடுதான் சினிமா; அவளோடுதான் சர்ச்...

அகிலா நாள் முழுவதும் கூட இருக்கிற வாய்ப்பிருந்தால் இப்படி 'கம்போஸிங்' போக வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக் காது. அவள் ஸ்கூலுக்குப்போய்விட, பையன் நர்ஸரிக்கும், மாமியார் அண்டை அயல் வீடு களில் ப்ர்ச்சிங்... ப்ரேயர் என்று கிளம்பி விட, அன்றுடப் பொழுது மார்பின் மீது கைகட்டி அவளை வெறித்துப் பார்க்கிற தனிமை தோன்றியது.

ஜோசப்புக்கும் அது புரிந்து இப்படி எங் கேஜ்மெண்ட் இருப்பது நியாயம் என்று ஆதரித்துத் தபால் எழுதினன். பெண்களே வேலை செய்கிற பிரஸ் என்பதில் அவனுக்குப் பரம திருப்தி.

சமீபத்தில் திருமணமானவர்கள்; திருமணத்துக்குக் காத்திருப்பவர்கள்; காத் திருக்கிற நேரத்தில் காதலிப்பவர்கள் என்று எட்டுப் பெண்கள் வேலை செய்யும் பிரஸ் அது.

அவர்களுக்கு எல்லாம் பகிர்ந்து கொள்ள அனுபவங்கள் இருந்தன. ஒருத்தி கணவ ளுேடு பீச்சுக்குப் போயிருப்பாள். மற் றெருத்தி சினிமாவுக்கு. ஒரே அரட்டை மயம். ஆனல் ஸ்டெல்லாவுக்குப் பகிர்ந்து கொள்ள மிஞ்சுவது துபாயிலிருந்து வரும் கடிதங்கள் மட்டும்தான். அது போதும் என் கிற மாதிரி அவளைத் தங்கள் குழுவில் ஒரு கௌரவ உறுப்பினராக அங்கீகரித்துக் கொண்டார்கள். பிரஸ்ஸில் பணிபுரியும் பெண்கள்.

அது இன்னெரு பீடம். ஆனல் பெயரள வுக்கு லபித்த பீடம். அந்தப் பெண் களின், அந்தப் பெண்களுக்குத் தெரிந்த பெண்களின், அவர்கள் மூலம் அறிந்த மற்ற எத்தனையோ பெண்களின் நிஜ அனுபவங் களைக் கேட்க அனுமதிக்கப்பட்ட பீடம்.

பிரஸ்ஸிலிருந்து வேலை முடிந்து வரும் போது பழைய பொதிகளை எல்லாம் இறக்கி விட்டுப்புதிய பார்சல்கள் ஏற்றப்பட்டமாதிரி புதிதுபுதிதாகச் சங்கதிகள் சுமந்து வருவாள் ஸ்டெல்லா. ஆண்களும் பெண் களும் இளமையிலிருந்து தொடங்கி முது மையை எட்டுவதற்குள் தொட்டுத்தொட்டுப் பிடிக்கும் அனுபவங்களின் சுமை...

மெல்லத் தென்றல் அடிக்கும்போது, மென்மையாக நிசிமல்லிகையின் மணம் கொடியிலிருந்து நெகிழ்ந்து மாடியேறி அவளைத்தழுவும்போது ஜுரம்வந்ததுபோல் உடம்பெல்லாம் சுடும்போது வேர் விட்ட வைகள் கிளைக்கின்றன.

விரைகின்ற ஒவ்வொர் இரவுக்கும் துபா யின் தொலைதூரத்தில் ரியால் ரியால்களாகப் பண மதிப்பு ஏறத்தான் செய்தது. ஜோசப் அனுப்பும் பணம் அந்த வீட்டுப் படிகளில் கூட ஏருமல் பாங்கிற்குப் போயிற்று.

நரேஷ்.

நரேஷ்.

நரேஷ்.

எல்லாமே அவனுக்கும் தெரியும்போலிருந் தது. பெண் மனசு. அதன் பூட்டுகள். அவற் றின் லீவர் மதிப்பு. அதைத் திறக்க வேண்டிய சாவிகள்.. சின்னச் சின்னதாகச் சிரித்துக் கொண்டே, ஐஸ்கிரீம் வாங்கி, கர்ச்சீப் வாங்கி, கரண்ட் பில் கட்டி, பாங்கில் மணிக் கணக்கில் மெனக்கெட்டு செக் மாற்ற உதவி, லேடீஸ் குடை கைப்பிடி உடைந்தால் மாற்றிக் கொண்டு வந்து.....

எதிர்பாராத நேரத்தில் கையைப் பிடித்து பஸ்ஸில் இடிபட்டுச் சாயும் போது தோளைத் தாங்கி...

நாளைக்கும் அவன் வருவான். அதுவும் வண்டியோடு.

"ஸ்டெல்லா... என்ன லவ்லி ஈவினிங்... சுகமா ஒத்தர் மேல ஒர்த்தர் சாஞ்சிக்கலாம் போல என்ன சௌந்தரியமான காத்து..."

"ஸ்டெல்லா... மனுஷனுடைய வாழ்விலே இளமை ஒண்ணுதான் கோல்டன் பீரியட்... அது வேஸ்ட்னு ரெஸ்ட் ஈஸ் எ கொலோசல் வேஸ்ட்."

"ஸ்டெல்லா... செக்ஸ்ல நோ ஈவில்; நோ வர்ச்யூ... செக்ஸ் இட்ஸெல்ஃப் எ ஜெனூயின் வர்ச்யூ."

ஒரு சிற்பி மகா பொறுமையோடு கருங் கல்லின் எதிர்க்கும் போக்கை அனுசரித்துச் சிற்றுளி செலுத்திச் செலுத்தி உருவாக்கு கிற மாதிரி அவன் ஒரு தருணத்தை உருவாக்கினான். ஸ்டெல்லா லேசில் இடங்கொடுக்காமல் ஓடியொளிந்த போதிலும் விடா முயற்சியோடு தொடர்ந்து வந்து உருவாக்கினான்.

நாளையும் அவன் வருவான். அதுவும் வண்டியோடு. அதுவும் வண்டியோடு!

நினைக்கும்போதே ஸ்டெல்லாவுக்கு முதுகு உதறிற்று. வயிற்றிலிருந்து அக்கினித் திராவகம் மாதிரி ஓர் அனல் புறப்பட்டு மார்பு முதுகு, இடுப்பு, கைகளிலெல்லாம் படர்ந்து தீப்பற்றுகிற வெக்கை தோன்றியது. உடம்பு அந்தத் தீப்பற்றுதலில் நீ நீண்டும் இன்பத்தில் கருகிவிட வேண்டும் என்று வேண்டியது.

மனசு பதறிற்று.

'ஜோசப்... உங்கள் ரியால்களை மூட்டை கட்டிக் கடலில் வீசிவிட்டு ஓடிவாருங்கள். கம் க்விக்... ஜோசப்... ப்ளீஸ் வந்து என்னைக் காப்பாற்றுங்கள்' கீழுதட்டைக் கடித்துக் கண்களை மூடிக் கொண்டு முறைவிட்டாள் ஸ்டெல்லா.

பஸ் வந்த ஓசை. ஜனங்கள் ஓடும் ஒலி கண்களைத் திறக்க வைத்தன. அவள் போக வேண்டிய பஸ்தான்.

அப்பாடா... இன்றைக்குத் தப்பித்தாயிற்று. இன்றைய வரைக்கும் பீடங்களைக் கொண்டாயிற்று.

வீட்டுக்குப் போனால் போதும் என்று ஸ்டெல்லா பஸ்ஸிற்கு விரைந்தாள்.

வீடு வந்து முகம் கழுவி, சேலை மாற்றி மோசஸுக்கு டிபன் தயாரித்து, மாமியாருக்குக் கோதுமைக் கஞ்சி வைத்து வேலை முடிந்து லேசாகப் பவுடர் போட்டுக்கொண்டு டி. வி.க்குப் பக்கத்தில் இருந்த நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு உட்காரும் போது மீண்டும் ஞாபகம் வந்தது.

நாளையும் அவன் வருவான், ஒரு வண்டியோடு.

நாளைக்குப் பிரஸ்ஸுக்குப் போகாமல் நின்று விட்டால்... மறுநாள் வருவான். என்றைக்குமே போகாமல் நின்றுவிட்டால்?

ஒரு வாரம் மோசஸின் டிப்தீரியாவுக்காகப் பிரஸ்ஸுக்குப் போகாத போது கம்போஸிங் நேரத்துக்கு நுனி விரல்கள் எல்லாம் ஒரு தினவு எடுக்க ஆரம்பித்து விட்டதும், எதையோ பறிகொடுத்த வெறுமையும் தோன்றியது ஞாபகம் வந்தது.

> ஒருவன் கோபத்தோடு எழுந்திருந்தால் நஷ்டத்தோடு உட்காருவான்.
>
> — ருமேனியப் பழமொழி.
>
> தகவல்: கந்ததாசன்.

தப்பித்துக் கொண்டு ஓடி ஒளிகிற மாதிரி ஆகிவிடும். என்ன செய்யலாம்? ஏன் இந்த அகிலாவை இன்னும் காணோம்?

அவள் எழுந்துபோய் வாசற்படி விட்டு இறங்கி மாடிப்பிடிச் சுவரைப் பற்றிக் கீழே அவள் வீட்டைப் பார்த்து, "அகிலா... அகிலா" என்று உரக்கக் கூப்பிட்டாள்.

மாடிப்படியில் பைபிள் வாசித்துக்கொண்டிருந்த மாமியார் காதில் அது விழுந்தது. அவள் நிமிர்ந்து பார்த்துவிட்டு, "அவளைக் கூப்பிடாதே! இனிமேல் அவள் இங்கே வர மாட்டா" என்றாள்.

நெருப்புச் சட்டி கவிழ்ந்த மாதிரி திக்கென்றது.

"என்ன ஆன்ட்டி! ஏன்?" என்று வெலவெலத்தாள் ஸ்டெல்லா.

"ஆமா. வரமாட்டா."

"ஏன்?"

"ஒனக்கு எதுக்கு அந்தக் காரணமெல்லாம். வரமாட்டான்னு விட்டுடேன்."

"தெரிஞ்சுக்கணும்லே. என் தப்பா... அவள் தப்பான்னு..."

"நீ ஒரு தப்பும் பண்ணலே! எம் மருமக எப்பேர்க்கொத்த உத்தமின்னு கர்த்தருக்கும் எனக்கும் தெரியும். இதுக்குத் தான் அல்பங்கள்கிட்டே சகவாசம் வாணாம்னு அப்பவே சொன்னேன். கூசாமே ஒரு அபவாதத்தைத் தூக்கி வீசிட்டுச் சட்டுன்னு பொண்ணை அடக்கி உட்கார வச்சுட்டு தூங்க."

முதுகுத் தண்டிலிருந்து பின் மூளை வரை சொடேரென்று ஒரு சவுக்கடி. அவர்கள் எந்த அபவாதம் சொல்ல முடியும்? நரேஷைப் பற்றியா?

"அகிலா சொன்னாளா?"

"அகிலா போய்ச் சொல்வாளா? எல்லாம் அவளோட பேரண்ட்ஸ்" மாமியார் தொண்டை தழுதழுத்துக் கண்கள் கலங்குவது இங்கிருந்தே புரிந்தது.

மாமியாருக்குத் தெரிகிற மாதிரி முகத்துக்கும் தோளுக்கும் ஒரு சிலுவை வரைந்து கொண்டாள் ஸ்டெல்லா. வரைந்த சிலுவையில் ஒரு ரட்சண்ய பலம் தோன்றிற்று இப்போது.

அவள் இன்று வரையில் பீடங்களைக் காப்பாற்றியிருக்கிறாள். 'நரேஷ்! நீ நாளைக்கு வா. வண்டியோடு இல்லாவிட்டால் வலையோடு வா. உன்னை எதிர்த்து முறியடிப்பது எப்படி என்று எனக்குத் தைரியம் வந்து விட்டது!'

ஸ்டெல்லா மெதுவாகப் படியேறினாள்.

# பூஸ்ட்

## சக்தியளிக்கும் சுவையான பானம் நாள்முழுவதும் அவன் விரைந்து செயல்பட வைக்கிறது

உங்கள் குழந்தை, துள்ளித்திரிந்து வளரும் இன்றைய இளைய தலைமுறையைச் சேர்ந்தவன். மட்டையைச் சுழற்றுவதில், பந்தை உதைப்பதில், புதிய விளையாட்டில் கிடைக்கும் பூரிப்பை அனுபவிப்பதில் அவனுக்கு எப்போதும் ஆர்வம்!

பள்ளியிலோ அவன் கடினமாக உழைக்கிறான். தனது துறுதுறுக்கும் மனத்தின் ஆர்வத்தைத் திருப்திப் படுத்த அவன் அதிகமாகப் படிக்கிறான். சிக்கலான கணக்கின் விடை கண்டுபிடிக்க தனது மூளையைச் செலுத்துவதில் அவனுக்கு மகிழ்ச்சியே. ஆம்! ஓட்டமும் நடையுமாக விரையும் வாழ்க்கையின் இந்நாட்களை உங்கள் குழந்தை ஒரு அதிவேக ரயிலைப்போலக் கடந்து செல்கிறான்.

### பூஸ்ட்—சாக்லேட் சுவையுள்ள சக்திக்கு

உங்கள் குழந்தை நாள் முழுவதும் சுறுசுறுப்பாக இயங்க சக்தி தேவை. ஆடை நிறைந்த பால், பொன்னிற கோதுமை, மால்ட்டெட் பார்லி மற்றும் கோகோ போன்ற சக்தியளிக்கும் பொருள்களிலிருந்து தயாரிக்கப்பட்ட பூஸ்ட் ஒரு சுவையான பானம்.

பாலுடன் சேர்ந்து சுவையளிக்கும் பூஸ்ட், உங்கள் குழந்தைக்கு மிகவும் ஏற்ற காலை வேளை பானமாக, அவனை நாள் முழுவதும் விரைந்து செயல்பட சக்தியளிக்கிறது.






## பூஸ்ட்

சுறுசுறுப்பான வாழ்க்கைக்கு சக்தியளிக்கும் எரிபொருள்.



HMM 9077 TAM

## "பாவாய், எழுந்திரு!"

ஆடி வரும் பொற்சிலையாய் ஜோதி வருவதைக் கண்ட சேக்கிழார், "வா, ஜோதி! நலமா?" என்றார்.

ஜோதி வந்த தோரணை, அவள் உடுத்தி யிருந்த நாட்டியப் பாங்கான ஆடை ஆபரணங்கள், சித்தன்ன வாசலின் ஓவியம் காட்டும் சிகையலங்காரம்....

எங்கேனும் நாட்டிய நிகழ்ச்சியை முடித்து விட்டு வந்திருக்கிறாளோ?

கால்களில் சலங்கையைக் காணோமே!

ஜோதி, ஐம்புலன்களும் மெய்ம் புலன் களாய்ச் சேக்கிழாரின் பாதங்களில் பணிந்து எழுகிறாள்.

"சுவாமி! என் கனவு நிறைவேறிவிட்டது. உங்களை எந்தக் கோலத்தில் காண வேண்டும் என்று திருநாகேச்சுரரை வேண்டிக் கொண் டேனோ அது பலித்துவிட்டது."

ஜோதியின் வேல் விழிகளில் இரு ஒளி நீர் முத்துக்கள்; அவை உணர்ச்சிப் பிரவாகத் துக்கு மடை போட்டும் கசிந்துவிட்ட கங்கைத் துளிகள்.

சேக்கிழார் மறுமொழி பகர்ந்தார்:

"நானறிவேன் ஜோதி! பொதுவில் சொல் வேன். இப்பதவி ஜோதிஸ்வரூபனே ஜோதி வடிவில் வந்து ஏற்கச் செய்த பதவி. சோழ மாமன்னர் கூட இப்பதவியை நானேற்ற போது, ஜோதியைப் பிரார்த்தனை செய்தது தான் அசரீரியோ என்று ஆச்சரியப்பட்டேன். ஒன்று புரிகிறது; அந்த இறைவன் என்னிடம் ஜோதி வடிவில் ஜீவஜோதியாய்த் திருவிளை யாடல் புரிந்து வருகிறான்."

திகைத்துப் போனாள் தேனினும் இனிய தேசுலாவும் ஜோதி.

கூடத்தைக் கவனிக்கிறாள்.

இரு இலைகள் போடப்பட்டிருக்கின்றன.

ஜோதி நுழைகிறபோதே, நின்றிருந்த பரி சாரகன், 'அழைத்தால் வருவோம்' என்கிற அச்சமுடன் வெளியே சென்றுவிட்டான்.

"உணவருந்தும் நேரம் பார்த்து வந்து விட்டேனா சுவாமி!"

"நல்ல நேரம் பார்த்து வந்தாய். நீயும் என்னுடன் சேர்ந்தே உண்ணலாம்!"

"என்னுடன் வேறு இருவர் வந்திருக் கிறார்களே, சுவாமி!"

"அதனாலென்ன? இருவர் உணவை ஒருவர் உண்ண முடியாது. ஆனால் நால்வர் உண்ண லாமே!"

"அப்படியா? ஏற்கிறேன் சுவாமீ! அதற்கு முன் என் சில உண்மைகளைப் பேசி ஆசீர் வாதம் பெற வேண்டிய நிலையில் இருக் கிறேன்."

சேக்கிழாருக்கு ஒன்றும் புரியவில்லை.

என்ன உண்மை? என்ன ஆசீர்வாதம்?

"வல்லரசி!" என்று குரல் விடுத்தாள் ஜோதி.

சற்றைக்கெல்லாம் மிகவும் அமைதியாக உள்ளே நுழைந்த வல்லரசி, சேக்கிழாரை, விழுந்து பணிந்து எழுகிறாள். அவளுடைய கையில் சிறிய பட்டுத் துணி மூட்டை.

என்ன அது?

முன்பு வெற்று ஓலைச் சுவடிகளைக் கொடுத்த மாதிரி இப்போது ஏதேனும் வெகு மதி கொண்டு வந்து இருக்கிறாளா?

மூட்டையை ஜோதியிடம் நீட்டிய வல்லரசி, மீண்டும் வெளியில் சென்று விடுகிறாள்.

என்ன இது?

ஏதோ ஏற்பாட்டுடன் நடக்கிற மாதிரி....

"என்ன ஜோதி! ஏதோ ஒத்திகை பார்த்து நடப்பது போலத் தெரிகிறது?"

"நானே ஓர் ஒத்திகைதானே சுவாமி?"

நானே ஓர் ஒத்திகை?

ஜோதி, பூடகமாய்ப் பேசுகிறாளே! ஆனா லும் அவளது பூரணத்தில் சேக்கிழாருக்கு நம்பிக்கை குறையவில்லை.

"ஜோதி! நீ சொல்வதன் உள் அடக்கம்?"

இமையாது கவனிக்கிறார் சேக்கிழார்.

இமைகள் தோகையாய்ப் படபடக்கக் கண்



கோவி. மணிசேகரன்

களில் சிரிக்கிறாள் கயல்விழியாள் ஜோதி.

ஜோதியின் யாழ் நாவிலிருந்து சொற் சுரங்கள் உதிருகின்றன.

''வேறொன்றுமில்லை சுவாமி! பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் உள்ள வித்தியாசம்தான். ஈசன் சில்லரைப் பாத்திரங்களாகவே படைத்திருக்கிறான்; சிலரை ஒத்திகைக்காக மட்டுமே படைத்துவிடுகிறான். நான் ஒத்திகைக்கு உரியவள் என்றுதான் சொன்னேன்.''

ஜோதியைப் பல கணங்கள் உற்றுப் பரிசீலிக்கிறார் சேக்கிழார்.

எத்தனையோ மெய்ப் பொருள்கள் அடங்கிய தத்துவம் இது.

ஆனாலும் தத்துவத்துக்குள் ஒரு தத்துவமாய், சித்துவமாய், சத்துவமாய்ப் பேசுகிறாள். ஆனால் இவளுக்குப் பின்னால் ஏதோ ஒரு மறைவு அடங்கி இருப்பது புரிகிறது. அது மறையான மறைவாக அவருள்ளே மணக்கவும் செய்கிறது.

''ஜோதி! ஏதோ உண்மை என்றும் ஆசீர்வாதம் என்றும் பேசினாயே?''



"இப்போது ஆசீர்வாதம்; பிறகு உண்மை."

"உண்டு முடித்த பிறகு இவற்றை வைத்துக் கொண்டால் என்ன?"

"இது ஒரு விரதமான விஷயம். அதனால் தான்.

மீண்டும் இரகசியத்தைப் பொடி செய்து அபிஷேகிக்கிறாள் ஜோதி.

கீற்று நிலவு அந்தப் பகல் வேளையிலும் அவளது அதரங்களில் ஜோதியாய் ஒளிரச் சிரித்துக் கொண்டே, கையிலிருந்த சிறிய பட்டு மூட்டையை அவிழ்க்கிறாள். அதனுள் புத்தம் புதிய காற்சதங்கைகள்.

"சுவாமீ! இதுவரை ஆடிய ஜோதி, வெறும் ஜடம்! இனி ஆடப் போகிற ஜோதி தான் அரும் ஜீவன்! எனவே, இதற்கு முன்பிருந்த ஜடமான சலங்கைகளைத் தூக்கி எறிந்துவிட்டேன். இப்போது ஜீவனான சலங்கைகளை உங்களிடம் கொடுத்து ஆசீர்வாதம் பெற வந்திருக்கிறேன். அதுவும் நடராஜர் திருநடம் புரிந்த தில்லை மண்ணில்!"

"உண்மை என்ன?"

"பிறகு சொல்கிறேன் என்றேனே!"

"அன்று நீ எனக்கு உணவு படைத்த போது சொன்ன உண்மைகள் நினைவில் இருக்கின்றனவல்லவா?"

"மறந்துவிட முடியுமா? அன்பால் உங்கள் அங்கங்களில் வியாபித்திருக்கிறேன்; ஆன்மாவால் உங்கள் இதயத்தில் திருநடம் புரிகிறேன்; அகமுடையாளாக என்றுமே ஆசைப்படேன்! இவ்வளவுதானே சுவாமீ?"

சேக்கிழார் கனிந்த கண்களில் முனிபுங்கவ முறுவல் பூத்துக் கவனிக்கிறார். நாவில் சொற்கள் நனைகின்றன:

"ஜோதி! சில சமயம் நீ பூடகமாய் இருக்கிறாய்! சில சமயம் நீ பூரணமாக இருக்கிறாய்! ஆனால் உன்னை நான் பூரணமாகவே நம்புகிறேன். அந்தச் சலங்கைகளை இப்படிக் கொடு!"

"சுவாமீ! நான் பூடகமாய் இருப்பது உண்மை; மறுக்கவில்லை. இதைவிட உண்மை, உங்களிடம் நான் பரிபூரணமாய் இருப்பது!"

ஜோதி சுநாதமாய்ச் சிரிக்கிறாள். அவளது இரு கரங்களும் சலங்கைகளைப் பயபக்தியுடன் நீட்டுகின்றன.

இறைவனை வணங்கிப் பெற்றுக்கொண்ட சேக்கிழார் "ஜோதி! ஆசீர்வதித்து உன்னிடம் கொடுப்பதைவிட, பஞ்சாட்சரத்தை உச்சரித்து உனது பாதங்களில் நானே அணிவிக்கிறேனே!" என்றார்.

"சுவாமீ!"

பதறிப் போனாள் ஜோதி.

"ஏனிந்த பதற்றம் ஜோதி?"

"என் பாதங்களை நீங்கள் தொடுவதா?"

"நான் உனக்கு அணிவிப்பதாக நினைக்கவில்லை. அந்த நடராஜப் பெருமானுக்கே அணிவிப்பதாக எண்ணுகிறேன். எங்கே உன் பாதங்கள்?"

"சுவாமீ! இது என்னைப் பொறுத்தமட்டில் பித்தான செயல்!"

அடுத்த கணமே, சேக்கிழார் கலகலவென்று சிரிக்கிறார்; பித்துப் பிடித்தவர் போலச் சிரிக்கிறார்; அதுவரை இவ்வாறு சிரித்து, அவரே அறியாதவர் போலச் சிரிக்கிறார்.

"என்ன சொன்னாய் ஜோதி? பித்தான செயல்.... எனது நம்பியாரூரான சுந்தரமூர்த்தி பெருமான் கேட்டது போல, பாடியது போல உணருகிறேன். நான் பித்தன் தான்; சிவப் பித்தன்தான்! எங்கே உன் பாதங்கள்? ஜோதி......! நீ என்னை அன்பால் களங்கமற்ற அன்பால் அங்கமங்கமாய் நேசிப்பது உண்மையானால், பாதங்களைக் காட்டு! இல்லையெனில் நீ பூரணமல்ல; பூடகம்!"

ஜோதி, தனது பாதங்களைக் காட்ட, பொன் வெட்டும் அந்த மெல்லிய செஞ்சாந்து கோலம் வரைந்த பாதங்களில், பொன்னம்பலவாணனை நமசிவாயத்தை எண்ணி, சலங்கைகளை அணிவிக்கிறார் சேக்கிழார்.

வெந்தழலில் வேகாத தமிழ் எழுதும் விரல்களின் தொடுவுணர்வால், செந்தமிழின் சிலிர்ப்பு கண்ட ஜோதியின் தென்றல் மேனி, சிவகாமச் சீற்றம் கொண்டு சீறி எழுந்து நிற்க, "வல்லரசி!" என, சந்நதமே வந்தவள் போல அழைப்பு விடுக்கிறாள்.

வெளியில்.....

சீற்றத்துக் குரல் கேட்டுச் சேக்கிழாரைப் பாதுகாக்க வந்த வீரர்கள் சலசலக்க....

ஜோதியுடன் வந்த அந்த மூன்றாவன், கபாலிகக் கோலத்தில் பயங்கரமாகக் காட்சி தந்தவன் காட்டிய புலி பொறித்த இலச்சினையைக் கண்டு பொறி கலங்கி, நின்று விட்டனர்.

இப்படியான இலச்சினை, சேக்கிழார் போன்ற பேரதிகாரிகள் மட்டுமே அணிய வல்லது.

வல்லரசி உள்ளே ஓடுகிறாள்.

சேக்கிழார் மருண்டு போனார்.

ஏனிந்த சந்நதம்? என்ன நடக்கப் போகிறது?

நாட்டியச் சீற்றமுடன் பாவனை செய்து நின்ற ஜோதி, "ம்ம்!" என்று வல்லரசியைப் பார்த்து உறும....

வல்லரசிக்குப் புரிகிறது....

அமைதியாக நடக்க வேண்டிய விஷயம், இப்படி ஆவேசமாக நடப்பதைக் கண்டு

## அருள்வாக்கு

பலபேர் சேர்ந்து சளசளவென்று பேசிக் கொண்டிருக்கும்போது எல்லாரையும் சைலன்டாக இருக்கச் சொன்னால் அவர்களால் இருக்க முடிகிறதா? முடிவதில்லை. ஒரு நிமிஷம், இரண்டு நிமிஷத்துக்கப்புறம் ஒருத்தர் இரண்டு பேர் ரஹஸ்யம் பேசிக் கொள்ள ஆரம்பித்து, அப்புறம் எல்லாருமே அப்படிப் பண்ணி, ஒரு பத்து நிமிஷம் போனால், ரஹஸ்யம் என்பதும் நல்ல சத்தமாகவே ஆகிவிடுகிறது. மனஸின் எல்லா உணர்ச்சிகளையும் ஒரே வீச்சில் அடக்கப் பார்ப்பதும் இப்படித்தான் முடியும். அதுவே "சைலன்ஸ் ப்ளீஸ்" என்று திரும்பத் திரும்பச் சத்தம் போட்டுக் கொண்டிருக்காமல் — (சிரித்தவாறு) "சைலன்ஸ் சைலன்ஸ்"

என்ற சத்தம் போட்டுக் கொண்டிருக்காமல் — ''ராம ராமா'', ''சிவசிவா'' என்று ஏதோ ஒரு நாமாவை யாராவது ஒருத்தர் சொல்ல ஆரம்பித்தால், அதிலேயும் ராகம் தாளம் எல்லாம் சேர்த்து ரஸம் அதிகமாகும்படி பஜனையாக ஆரம்பித்தால் எல்லாரும் அதையே திருப்பிச் சொல்லி அத்தனை சத்தமும் இந்த நாம சப்தத்திலேயே அடங்கிப் போய்விடுகிறது. அரை மணி, ஒரு மணி கூட ராத்திரியெல்லாம்கூடப் பல தினுஸாகப் பலுக்கிப் பலுக்கி ராக தாளங்களை மாற்றி, நாமங்களையும் மாற்றி பஜனை செய்தால் எல்லாரும் மற்றப் பேச்சுப் பேசாமல் அதில் கலந்து கொள்ள முடிகிறது. இது மௌனம் இல்லைதான். ஆனால் அதற்கு நெக்ஸ்ட் பெஸ்ட் (அதற்கடுத்தபடியான உத்தம நிலை) என்று சொல்லலாம். இப்படி நாமாவிலே தோய்ந்து சொக்கிப் போனால் தானே மௌனத்தில் கொண்டுவிட்டுவிடும். வெறும் பேச்சு அப்படிப் பண்ணுமா?



**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

அரண்டு அலைமோதினாலும், ஜோதியின் உறுமல் எதிரொலித்த அடுத்த கணம் —

வல்லரசியின் நாவிலிருந்து ஜதியாம் சொற்கொட்டுகள் உதிருகின்றன:

''தத்தாங்கிட தகதரிகிட தக, தத்தித்தாங்கிட, தகதரிகிட தக, தகஜனுதா, தகஜனுதர், தக ஜனுதா'' —

**ஆதி தாளத்து அந்த ஒரு சுற்றில் ஜோதி உலகையே சுற்றி விட்டது போல ஒற்றைக் காலையூன்றி, மற்றைக் காலை 'எடுத்த பாதம்' போல் தூக்கி, நடம்புரிந்த கோலம்....**

**புதிய சலங்கையுடன் அவள் அணிந்திருந்த இனிய சிலம்பின் ஓசையும் இணைந்து ஒலித்த ஜாலம்....**

அயர்ந்து போன முதலமைச்சர் அம்பலவாணனைக் காண்பது போல வியந்து நோக்குகிறார்.

வல்லரசியின் வாய் ஜதி முடித்த உடனே, ''பித்தா!'' என *இந்தளப்பண்ணில் ஜோதி, இனிமையாய் இசைக்க....

ஆ! அபிநயமா அது? இப்போதுதான் ஜோதியின் அழகு அர்த்தமுள்ள அழகாய்ப் பிரகாசிக்கிறது.

சேக்கிழார் கொஞ்சமும் எதிர்பாராதது இது.

ஜோதியோ, தன் வரை இதனை எதிர்பார்த்தே வந்திருந்தாள். ஆனால் அவள் எதிர்பார்த்தது சிரான நடனம்; எழுந்ததோ சீற்றமான நடனம்.

வல்லரசி தொடர்ந்து பாடினாள். குரலா அது? பாலும் தேனும் கலந்த குரல்.

சுந்தரத் தமிழ் மந்திரமாய் ஒலித்து மாங்கனியாய் இனிக்கிறது.

அவரது முதல் பாடல் அது!

இவளது முதல் ஆட்டமோ இது?

பாட்டின் பொருள், ஜோதியின் பாவனைகளில் வெளிப்படுகின்றன.

கண்களிலே பொழிப்புரை.....
மேனியிலே விரிவுரை......
கரங்களிலே பதவுரை......
கால்களிலே விளக்கவுரை.....

வாத்தியங்களில்லாமலும் அபிநயம் சாத்தியமோ?

நிரூபிக்கிறாள் ஜோதி.

அந்தக் கபாலிகனும் உள்வாசல் ஓரம் நின்று மறைந்து கவனித்து மலைக்கிறான்.

அந்தக் கடைசி வரிகள்....

'அத்தா உனக்கு ஆளாகி....'

அந்த வரியைப் பாடுகிறபோதுதான் எத்தனை சங்கதிகள்; எத்தனை எத்தனை விதமான மெய்ப்பாடுகள்....

ஜோதி, தானே ஆளாகி, தலைவன்தாள் பணிவது போலப் பணிந்து அப்படியே பல கணங்கள் சிலையாகிப் போனாள்.

இசைக் கருவிகளற்ற இனிய நடனத்தை இதுவரை கண்டிராத சேக்கிழார், மெய்யுருகிப் போனார்.

கபாலிகனோ, ஆனந்தக் கண்ணீர் விழிகளுக்குத் திரையிட்டாலும் விழிப்புடனே நின்று கவனிக்கிறான்.

ஜோதி இன்னமும் சிலையான தோற்றத்திலிருந்து நிலையான மாற்றத்துக்கு வர முடியாமல் பணிந்தே காணப்படுகிறாள்.

சேக்கிழார் மெல்ல நிலையுணர்ந்து, ''ஜோதி! எழுந்திரு!'' என்றார்.

எழுந்திருக்கவில்லை.

''ஜோதி!''

இல்லை, இல்லை, இல்லை.

மெல்ல அவளது வெயுறு தோள்களில் வலக்கை பதித்து, ''ஜோதி! எழுந்திரு, பாவாய்!'' என்றார்.

உணர்வுபெற்றஜோதி, தனதுசுடர்பெற்ற செவ்வேல்போன்றவிழிகளின் மடல்திறந்து கவனிக்கிறாள்.

''பாவாய், எழுந்திரு! என்றா சொன்னீர்கள்? நல்லவேளை! மகளே, எழுந்திரு என்று சொல்லாமல் போனீர்களே!''

சேக்கிழார் விளங்காமல் நோக்க....

''தொட்டுவிட்டீர்களே!'' என்று அவள் கூறியதுதான் தூக்கிப் போடச் செய்தது.

இங்கேயுமா புரிந்து கொள்ள முடியாத பேச்சு?

என்ன சொன்னாள்?

''மகளே எழுந்திரு என்று சொல்லாமல் போனீர்களே!''

கடைசியில்.....

'தொட்டு விட்டீர்களே....

இதன் பொருள்? இதன் அர்த்தம்? இதன் அவசியம்?

(தொடரும்)

* 'பித்தா பிறை சூடி' என்ற பதிகத்தைச் சுந்தரர் பாடினார் என்று கூறும் 'கொத்தார் மலர்க் குழலாளொரு' என்று தொடங்கும் பெரிய புராணச் செய்யுட்கள் இந்தளப்பண்ணில் அமைந்திருப்பதாக வரலாறு கூறுகிறது. எனவே சுந்தரரும் இந்தளப் பண்ணிலேயே பாடி இருக்க வேண்டும்.



# சுவாதி பைனான்சியர்ஸ்

சென்னை - 600 017.

## எங்களது நன்மதிப்பிற்கும் நற்சேவைக்கும் ஓர் எடுத்துக்காட்டு

T.VISWANATHAN

"முதிர்ச்சியடைந்த டெபாசிட்டுகளை
குறிப்பிட்ட காலத்தில் திருப்பியளிப்பதிலும்
மாதாமாதம் வட்டித்தொகையை உரிய
தேதியில் கொடுப்பதிலும் சுவாதி பைனான்ஸ்
சிறந்து விளங்குகிறது. என் அனுபவத்தில்
நடைமுறையில் இதை தெரிந்து கொண்டேன்"

T. விஸ்வநாதன்
சென்னை-79.

# சுவாதி பைனான்சியர்ஸ்

உங்களது டெபாசிட்டுகளுக்கு மற்றும் ஓர் பாதுகாப்பு
உங்களது பிக்செட் டெபாசிட்டுகளுக்கு அதிக வட்டி
விகிதத்துடன் பாங்க் கியாரண்டி வழங்குகிறது.

வட்டி விகிதம்

# 24%

| 5 Years | 7 Years | 10 Years |
|---|---|---|
| 18% | 21% | 24% |

மாதந்தோறும் அளிக்கப்படும்.

## பிக்ஸட் டெபாசிட் திட்டம்

| 6 Months | 1 Year | 2 Years | 3 Years | 5 Years |
|---|---|---|---|---|
| 15% | 16½% | 17½% | 19% | 22% |

வழக்கமான வட்டி விகிதங்களின் மேல் **3%**
கூடுதல் வட்டி அளிக்கப்படுகிறது.



ரூ. 10,000/- டெபாசிட் செய்பவர்களுக்கு (2 வருடங்கள்)
பண்டிகைக்கால சிறப்பு பரிசாக 1/4 சவரன் தங்க
மோதிரம் அன்பளிப்பாக வழங்கப்படும்.

**காமதேனு டெபாசிட் திட்டம்** உங்களது டெபாசிட் இத்திட்டத்தின் மூலம் நான்கே வருடங்களில் இரு மடங்காகிறது. அதாவது ரூ. 5,000/- ரூ. 10,000/- ஆகிறது.
சிறப்புப் பரிசு : ஒவ்வொரு ரூ. 5,000/-ம் அதற்கு மேலும் டெபாசிட் செய்பவர்களுக்கு (குறைந்தது 2 வருடங்கள்) சிறப்பு பரிசாக வெள்ளி குத்து விளக்கு அன்பளிப்பாக வழங்கப்படும்.

தொடர்பு கொள்ளவேண்டிய முகவரி,




## சுவாதி பைனான்சியர்ஸ்

பதிவு அலுவலகம்: 75, ரங்கநாதன் தெரு
(முதல் மாடி—உஸ்மான் ரோடு) எம்.எஸ். மார்க்கட்,
தி. நகர், சென்னை-17. போன்: PP 443827

சுவாதி — உங்களது வெற்றிக்கு துணைவன்

சவமான அமைதி. யாருடைய நடமாட்டமும் இல்லை. கோயில் மரம் மட்டும் ஓயாமல் அசைந்து கொண்டு எதற்கோ, தெய்வத்துக்குத்தான் வெளிச்சம், சாட்சி சொல்லிக் கொண்டிருந்தது. போலீஸ்காரர்களைப் பார்த்துக் குரைப்பதை நாய்கள் நிறுத்திக் கொண்டன. நாய்கள் காக்கிச் சட்டைக்காரர்களோடு பழகிவிட்டன.

நவநீதம் எழுந்து கொண்டாள். இருள் இன்னமும் இருந்தது. முழுசு விடியவில்லை.

# அந்தச் சூடான வார்த்தை



இரா. சோமசுந்தரம்

சாதாரணமாக இந்த நேரத்தில் நடமாட்டம் துவங்கிவிடும். இந்த கிராமமே மெல்ல விழிப்பு கொள்ளும். முதலில் மாடுகளைத் தான் ஓட்டிக் கொண்டு போவார்கள். அதன் பிறகு மனிதர்களின் நடமாட்டம்.பூக்கூடையுடன் செல்லும் கோயில் குருக்கள். இப்படி ஒவ்வொருவராய் நடமாடத் துவங்குவார்கள். இன்று அவைகள் எதுவும் நிகழவில்லை.

ஊருக்கும் சேரிக்கும் சண்டை வந்தது. ஒரு சிறிய சண்டைதான். தலைவர் சிவலிங்கம் மனசு வைத்திருந்தால் இதைத் தடுத்திருக்கலாம். ஆனால், எல்லோருமே கலகம் பண்ணினால்தான் நியாயம் பிறக்கும் என்ற ரீதியில் சும்மா இருந்தார்கள். சண்டை பெரிதாகிக் கத்திக் குத்து அளவுக்குப் போனதும் போலீஸ் வந்துவிட்டது.

போலீஸ்காரர்கள் நடுராத்திரியில் வந்தார்கள். ஒவ்வொரு வீடாகத் தட்டி வீட்டு ஆண்களை வண்டியில் ஏற்றிக் கொண்டார்கள். சத்தம் கேட்டு எழுந்து ஜன்னலைத் திறந்து பார்த்த நவநீதம், போலீஸ் வேனில் எதிர்வீட்டு ஆறுமுகம் கட்டிய லுங்கியோடு ஏறி உட்கார்ந்ததைப் பார்த்து ஏதோ விபரீதம் நடக்கிறது என்று புரிந்து கொண்டாள். நிலா வெளிச்சத்தில் சம்பந்தம் வாத்தியாரும் அண்ணாமலையும் போலீஸ்காரர்களுக்கு மத்தியில் நிற்பதைப் பார்த்தாள்.

அவள் வீட்டுக் கதவு பலமாகத் தட்டப்பட்டது. அவள் திறந்திருக்கவில்லையானால் கதவை உடைத்திருப்பார்கள்.

"எங்க உன் ஊட்டுக்காரரு?"

"அவரு இல்லீங்க. அவரு மில்லுக்கு வேலைக்கி போயி இருக்காரு."

அவர்கள் இறங்கிப் போய் அடுத்த வீட்டை விசாரிக்கும் வரை வாசலில் நின்றாள். சப் — இன்ஸ்பெக்டர் "ஊட்டுக்காரரு பேரு என்ன?" என்றார்.

சொன்னாள். அவள் உடம்பு முழுவதும் நனைந்து விட்டது. கண்களில் அழுகை நின்றிருந்தது. பெண்கள் எல்லாரும் அவளைப் போல வாசலில் நின்று கொண்டு ஓவென அழுது கொண்டிருந்தார்கள். ஜானகி மட்டும் அழாமல் தைரியமாகத் தன் கணவனுக்குச் சட்டை கொண்டு போய் கொடுத்தாள். அவளது தைரியத்தைப் பார்க்கும் போது நாம் மட்டும் ஏன் கணவனின் வேலையிடமும் பெயரும் சொன்னோம்? பொய் சொல்லியிருக்கலாமே என மனம் நொந்தாள். கிராமத்தையே எழுப்பி விட்டிருந்தார்கள்.

இந்தக் களேபரம் அடங்க ரொம்ப நேரமானது. கோழிகளும் இந்த அசம்பவங்களை உணர்ந்து கொண்டு கூவாதொழிந்தன. அன்று வாசலுக்கு யாரும் நீர் தெளிக்கவில்லை. நவநீதம் சுத்தம் விரும்புகிறவள் என்றாலும் அவளும் கூட இல்லாததையும் பொல்லாததையும் நினைத்துக் கொண்டு வீட்டுக்குள்ளேயே இருந்தாள்.

டவுனுக்குப் போகும் வள்ளியம்மையிடம் சொல்லி, தன் அண்ணனுக்குச் சொல்லியனுப்ப வேண்டும் என்று தீர்மானித்தாள். அண்ணன் இருப்பாரோ என்னமோ! அடிக்கடி வெளியூர் போகிறவர் ஆனாலும் சொல்லியனுப்புவோம் என்று நினைத்து வாசற்படியில் இறங்கப் போனபோது வெளியில் நின்றிருந்த போலீஸ்காரர்களைக் கண்டதும் உள்ளே வந்துவிட்டாள்.

ரொம்பநேரம்வீட்டுக்குள்ளேயே அலைந்து சலித்து குழந்தைக்காகவும் தனக்காகவும் சமைக்கலாம் என்று அடுப்பேற்றிய போது, "யாரும்மா வீட்ல? கொஞ்சம் தண்ணி குடும்மா" என்ற குரல் கேட்டு எட்டிப் பார்த்தாள். வயதானவராகவும் பருமனாகவும் இருந்த அந்தப் போலீஸ்காரரைப் பார்க்க அவளுக்குப் பயம் தோன்றவில்லை.

அவர் தண்ணீர் குடித்து முடித்ததும், "அவங்களை எப்ப விடுவீங்க?" என்றாள்.

"மேலிடத்திலிருந்து உத்தரவு வந்ததும்."

"அது எப்ப வரும்?"

"எனக்கெப்படித் தெரியும்?"

அந்தப் போலீஸ்காரர் நல்லவராகத் தெரிந்தார். அவளுக்கு அப்படித்தான் தோன்றியது. வெளித்திண்ணை இல்லாத வீடு அவளுடையது. அவர் காலை முதல் அங்கேயே நின்று கால்கடுத்தவராய் அவள் மனத்தில் பட்டது. அவளுக்குத் தன் அப்பா ஞாபகம் வந்தது. பக்கவாட்டிலிருந்து பார்த்தால் அப்படியே அப்பாதான். காதோரம் நரைத்த முடி. கன்னச் சரிவில் இளர்ந்து நிற்கும் மீசை. காது மடல்களில் கம்மல் போடலாம் போல பொத்தல்... அவள் உள்ளே போய் மடிப்பு நாற்காலியின் மேல் வைத்திருந்த படுக்கையைக் கீழே வைத்துவிட்டு நாற்காலியைக் கொண்டு வந்து கொடுத்தாள்.

"இதுல உக்காருங்க ரொம்ப நேரம் நிக்கறீங்களே..."

"இன்னும் உங்க ஊட்டுக்காரரைப் புடிக்கலியா?"

அவளுக்குப் புரிந்தது. அவள் கணவனைப் பிடித்துக் கொண்டு போயிருந்தால் இந்தக் கருணை அவர்மேல் அவளுக்குத் தோன்றியிருக்காது. அவள் ஒன்றும் சொல்லவில்லை!

"அண்ணனை யாரும் புடிக்கலைக்கா... ஆமா... மில்லுக்குள்ளதான் இருக்காரு... மணி வந்து சொன்னான். யாரானாலும் மில்லுக்குள்ள வந்து புடிக்கக்கூடாது. வெளியில வந்தப்புறம் புடிச்சிக்குங்கன்னு மில் முதலாளி சொல்லிட்டாராம். கால்வாசி ஆம்பளைங்க மில்லுக்குள்ளதான் கிடக்காருங்க" வள்ளியம்மை சொன்னாள்.

நவநீதம் மனசு நிறைந்தாள். இரவெல்லாம் என்னவெல்லாமோ தோன்றி மனத்தில் விபரீதம் விளைவித்தது.

"வாத்தியாரு அண்ணன சரியான அடி அடிச்சிட்டாங்களாம்... முட்டி ரெண்டும் பேந்துருச்சாமில்லே..."

"உங்க வீட்டுக்காரரு...?"

"அவரும் மில்லுலதான் இருக்காரு" அவள் குரலில் மகிழ்ச்சி தெரிந்தது.

மில்லுக்குள்ளேயே கேண்டீன் இருக்கிறது சாப்பாட்டுக்குத் தவிப்பு ஏற்படாது.

# மங்கையர் மலர்

ஜூன் 86


* பள்ளிகள் திறந்ததும் தொல்லைகள் தீர்ந்ததா?

* உலகின் முதலாவது காரோட்டிய காரிகை!

* முஸ்லிம் பெண்களின் எதிர்காலம்? — வாஸந்தியின் சிறப்புக் கட்டுரை



துணிகள்தான் தேவையாக இருக்கும். யாரிடமாவது கொடுத்தனுப்பலாமா அல்லது தானே போகலாமா என்று யோசித்தாள். வள்ளியம்மை ஒரு சம்பவத்தை நினைவு படுத்தினாள்.

'தனியாக ரெட்டியாரோட மருமவள் தண்ணீர் எடுக்கச் சென்றபோது, போலீஸ்காரர் ஒருவர் ''ஊர்ல ஓர் ஆம்பளையும் இல்லே. நாங்கதான் உங்களுக்குக் காபந்து!'' என்று கூறிச் சிரித்தாராம்.

வள்ளியம்மை கூறிய இந்தச் சம்பவம் நவநீதத்துக்கு அச்சம் தந்தது.

**வீ**டு சொல்லிக் கொள்ளும் படியாகப் பெரிது இல்லை. தெருக் கோடியிலிருக்கும் குடிசைக்குத் தள்ளி இரண்டாவது வீடு. ஒரு காலத்தில் அந்தக் குடிசை நிலம் இவளது மாமனாரின் சொத்துதான். நவநீக்கு ஒரு மைத்துனன் இருந்தாலும். அவன் குடித்தே செத்துப் போனதாய் அவள் வீடு வந்த நாலாம் நாள் சொன்னார்கள். அவன்தான் தன் பாகத்தை விற்றுப் பொருட்பெண்டிர், மதுவென்று போனவழி சென்று போகவும் போய்விட்டான். அந்தப் பகுதி மட்டும் அந்த விதமாய்ப் போகாமல் இருந்திருந்தால் இரண்டு வாசல் வைத்துப் பெரிய வீடு கட்டியிருப்பேன் என்று காலமான அவள் மாமனார் ஏக்கத்தோடு சொல்வதுண்டு.

ஜானகி மில்லில் வேலை செய்யும் தன் மைத்துனனுக்குச் சாப்பாடு கொடுத்துவிட்டு வந்து கொண்டிருந்தாள். நவநீயைப் பார்த்ததும், ''உங்க வீட்டுக்காரரு காலம்பறமா துணிகளை எடுத்துட்டு வரச் சொன்னாரும்மா'' என்றாள்.

பொழுது சரயச் சாய அவளது பயம் அதிகமானது. இருள் கவிந்து மூடியதும் இன்னமும் அதிகமாக மனத்தில் பயம் தோன்றியது. குழந்தை தரையில் படுத்தபடி தூங்கிவிட்டான். அவளால் தூங்க முடியவில்லை.

வாசற்கதவு, தோட்டக் கதவு எல்லாவற்றையும் தாழ் போட்டுவிட்டு எரியும்விளக்கை அணைத்துவிட்டுப் படுத்தாள். நீண்ட நேரம் அதே அச்சம்தான் இருந்தது. ஜன்னலின் இடுக்கு வழியே சிகரெட் புகை நெடித்தது. வெளியில் போலீஸ்காரர்களின் பேச்சுக் குரல் கேட்டுக் கொண்டேயிருந்தது.

ஜானகியின் வீட்டில் இன்று படுத்துக் கொண்டிருக்கலாமே. அவள் தைரியசாலி. கொஞ்சம்கைமீறினால் கொடுவாள் கொண்டு வெட்டவும் தயங்க மாட்டாள். அவளிடம் அடைக்கலம் போயிருக்கலாம். ஆனாலும் இனி நேரமில்லை. ஊரே அடங்கிவிட்டது. யாருக்காகப் பயந்து வீட்டுக்குள் இருந்தாளோ அவர்களைக் கடந்து போய் ஜானகியின் வீட்டுக் கதவைத் தட்டி அவர்களைப் பீதிபடுத்த விரும்பவில்லை. மேலும், இப்படியொரு பெண் தனியாக இருக்கிறாள் என்பதைத்தானே காட்டிக் கொள்வதாகிவிடும்.

புரண்டு படுத்தாள். இரு ஜோடி பூட்சுகளின் சர்... சர்... சர்சர்... தேய்ந்துகொண்டே போனது. நாய் திண்ணையில் ஏறி நின்று குரைக்கும் ஓசை கேட்டது.

வீட்டுக்குள் வெளிச்சம் வந்தபோது அவள் மனத்திலிருந்து எல்லாப் பயங்களும் சலனங்களும் வெளியேறின. புதிதாகப் பிறந்து எழுந்தவள் போல இருந்தாள். நேற்றைய மனக்குலைவும் இன்றைய மனநிறைவும் எப்படி என வியந்து போனாள். பெருத்த நம்பிக்கையாகக் காற்று வீசிக் கொண்டிருந்

தது.

சமைத்து, உணவைக் கேரியரில் போட்டுக் கொண்டாள். அவனுக்குத் தேவையான பேண்ட் சட்டைகள் எடுத்துக் கொண்டாள். குழந்தையைத் தூக்கிக் கொண்டு ஒற்றையடிப் பாதை வழியே நடந்து வந்த போது ஒருசில போலீஸ்காரர்கள் எதிர்ப்பட்டார்கள். என்றாலும் அவள் அச்சமற்று ஓரம் ஒதுங்கி நின்றாள். பகலின் துணை அவளுக்குப் பெரிதாகப் பட்டது. சாலையில் ஓடித் திரும்பி மறையும் பஸ், லாரிகள் அவளுக்குத் துணையாயின.

மில்லின் கேட்டில் போய் நின்றதும் என்ன வென்று விசாரிப்பது, யாரைக் கேட்பது என்று தெரியவில்லை. சண்முகநாதன் வந்து கொண்டிருந்தான்.

''அண்ணே...''

சண்முகநாதன் திரும்பி, ''நீங்களா, அவரைப் பார்க்கணுமா?'' என்றான்.

''ஆமாம்.''

''வாங்க'' என்று அவளை அழைத்துக் கொண்டு உள்ளே போனான். போகும் முன்பாக செக்யூரிட்டியிடம் ஏதோ சொன்னான். பலர் அவளையே பார்ப்பதையும் ஒரு செய்தியை எதிர்பார்ப்பதாகவும் பட்டது.

சண்முகநாதனும் நவநீயும் கேண்டீனில் நுழைந்த போது அவள் கணவன் நிமிர்ந்து பார்த்தான். குளிக்காமலும் தலைவாராமலும் வேறு மாற்றுத் துணி இல்லாமல் அழுக்குச் சட்டையை மாட்டிக் கொண்டிருந்தான். நவநீயிடமிருந்து குழந்தையை வாங்கிக் கொண்டு தொழிலாளர் ஓய்வறையின் ஓரமாக அவளை இட்டுச் சென்றான்.

அவன் அவளை நேருக்கு நேராகப் பார்த்த போதெல்லாம் — அவன் கண்களில் ஒரு வித்தியாசமான இயல்பற்ற உணர்ச்சியைக் கண்டாள். அது நல்லதாக அவளுக்குப் படவில்லை.

நிறைய பெஞ்சுகள் போடப்பட்டிருந்தது. ஒரு பெஞ்சில் உட்கார்ந்தார்கள். பெருக்கப்படாமல் சிகரெட் முனைகள் சிதறிக் கிடந்தன.

அவன் அவளையே பார்த்துக் கொண்டு இருந்தான். இந்த அமைதியை அவள் விரும்பவில்லை.

''சாப்பிடுங்களேன்'' பையைப் பிரித்து டிபன் கேரியரை வெளியில் எடுத்தாள்.

''வேண்டாம். இப்பதான் சாப்ட்டேன். மதியம் சாப்பிடறேன் அப்படியே வை.''

நவநீ முன்போலவே டிபன் கேரியரைப் பையில் இறக்கி வாய்ப்புறத்தை முடிச்சுப் போட்டு வைத்தாள். அண்ணனிடம் போய்த் தங்கப் போவதையும், தனது நேற்றைய வீணான பயங்களையும் சொல்லி அவனிடம் டவுனுக்குப் போவதற்காக, பணம் கேட்க எண்ணினாள். குழந்தை கீழே இறங்காமல் இருக்கும் பொருட்டு இழுத்து அணைத்துக் கொண்டு மடியில் வைத்தாள்.

அவன், ''நீ உங்க அண்ணனோட போய் இரு. என்னைப் பத்திக் கவலைப்படாதே'' என்றான்.

''ஏன்?''

தான் சொல்ல நினைத்ததை அவனே சொன்னதும் மகிழ்ச்சி அடைந்தாலும் இந்தப் பேச்சை 'பெண்' இயல்பால் வளர்க்க விரும்பினாள்.

''ஏன்னா! என்ன கேள்வி இது. போன்னா போவணும்.''

''அதான் ஏன் போவணும்?''

''போலீஸ்காரனுங்களைப் புடிச்சிப் போச்சா?''

மனத்தில் அருவருப்பு தோன்றியது. அவன் கேட்டதற்கு வள்ளியம்மை சொன்ன விஷயம் இதுவரை வந்திருப்பதுதான் காரணம். எப்படி அவனால் இந்தப்படியாக இதயமில்லாமல் கேட்க முடிந்தது? ''போலீஸ்காரனுங்களைப் புடிச்சுப் போச்சா?''

தன்னைக் காப்பதற்காகவோ, இல்லை தன் மேல் கொண்ட காதலினாலோ அவன் தன்னை டவுனுக்குப் போகச் சொல்கிறான் என்று அவளுக்குத் தோன்றவில்லை. பழம் எச்சிலாகி விடக் கூடாதே என்கிற கரிசனம் பழத்தின் மீதான அன்பு அல்லவென்றும் தான் மீண்டும் கவ்வைக்கும்போது ஏற்படும் அருவருப்பை நினைத்தே இக்கரிசனம் என்பதும் அவளுக்குத் துரதிர்ஷ்டவசமாகத் தெளிவாய்த் தெரிந்தது. அழுதாள்.

அவன் தேற்றினான்: ''அழாதே நீ அண்ணனோட போய் இரு. என்ன தப்பு. மத்த சமயத்துல எப்படியோ இந்த மாதிரி சமயத்துல அண்ணி அன்பா நடந்துக்கும். ஊர்ல ஒரு ஆம்பளையும் இல்லாதப்ப நீ அங்க இருக்கிறது நல்லாயிருக்காது. ஏதாவது ஆயிடுச்சின்னா...'' அவளிடம் மூன்று பத்து ரூபாய் தாள்கள் கொடுத்து கேட் வரை வந்து குழந்தைக்கு முத்தமிட்டு அனுப்பினான்.

வெளியில் நிறைய போலீஸ்காரர்கள். நின்று கொண்டும் ஆங்காங்கே உட்கார்ந்து கொண்டும் பேசிக் கொண்டுமிருந்தார்கள்.

அவள் பஸ்ஸுக்காகக் காத்திருந்தாள்.

'ஏதாவது ஆயிடுச்சின்னா?' என்ற வார்த்தை இன்னமும் மனத்தில் வந்து போனது. தன் கற்பைப் பற்றி ஒரு பெண் தான் கவலைப்பட வேண்டும்: ஆண் அல்ல என நினைத்தாள். ஆண்கள் சூழ்ந்திருக்கும் இந்த உலகத்தில் அந்த ''ஏதாவது...'' எப்போதும் நடக்க வாய்ப்பு உள்ளது. அப்படி அது நிகழாத முன்பே அச்சம் கொள்கிற அவன், அது நிகழ்ந்த பின் அவளை முழு மனத்துடன் ஏற்க மாட்டான் என்றும், அப்படி ஏற்க முடியாமல் மனம் தயங்கும் அவள் கணவனின் அணைப்பிலேயே அவள் களங்கப்பட்டுவிட்டதாகவும் தான் கற்பிழந்ததாகவும் உணர்ந்தாள்.

ஒரு பெண்ணுக்குப் பாதுகாப்பு 'அது' ஏற்படாமல் தடுக்கும் செய்கையல்ல: மாறாக, 'அது' நடந்துவிடும் பட்சத்தில் முழு மனத்தோடு ஏற்றுக் கொள்கிற மனசுதான் என்றறியாத உலகில் அவள் எங்கே போவது எனத் தயங்கி நின்றாள். தன் குழந்தையைக் கண்ணீருடன் அணைப்பது மட்டும்தான் அவளால் முடிந்தது!

### ஆசிரிய மாமனர்

பள்ளியில் படித்தபோது கணக்கில் படு மோசமாயிருந்த என்னை எப்படியோ பாஸ் செய்ய வைத்துவிட்டார் என் கணக்கு வாத்தியார். மீண்டும் மீண்டும் பொறுமையாகச் சொல்லிக் கொடுத்துப் புரிய வைத்த அவரை மறக்க முடியவில்லை. கல்லூரிப் படிப்பு முடிந்து சொந்த ஊர் திரும்பியபோது தற்செயலாக அவரைச் சந்தித்தேன். அவர் அன்புடன் அழைத்ததால் அவர் வீட்டுக்குப் போனேன். வேலையிலிருந்து ஓய்வு பெற்றிருந்த அவர் பொருளாதாரப் பிரச்னைகளால் தம் மகளுக்குத் திருமணமாகாமல் இருப்பதைச் சொன்னார். இப்பொழுது நான் அவர் மாப்பிள்ளை என்பதை நான் சொல்லாமலே யூகித்திருப்பீர்களே!

— ஜி. பாலாஜி, வேலூர்—4.

### இடது கை எக்ஸ்பர்ட்!

எஸ்.எஸ்.எல்.சி. வகுப்பில் உடன் படித்த மாணவிக்கு யாரோ காதல் கடிதம் எழுதிவிட, அவள் போலீஸ் அதிகாரியின் மகள் என்பதால் விஷயம் கையெழுத்து நிபுணர்கள் வரை போய்விட்டது! ஆனால் கடைசி வரை 'குற்றவாளி'யைக் கண்டுபிடிக்க முடியவில்லை. பள்ளியின் கடைசி நாள் தேநீர் விருந்து நடக்கையில் என் நண்பன் திடீரென்று எழுந்து வலது கையால் எழுதுவது போல் இடது கையாலும் தனக்கு எழுத வரும் என்றும் அப்படி இடது கையால்தான் தான் அப் பெண்ணுக்குக் காதல் கடிதம் எழுதியதாகவும் ஒப்புக் கொண்டு அவளிடம் மன்னிப்புக் கேட்டான். இடது கையாலும் பிரமாதமான வேகத்துடன் அவன் எழுதிக்காட்டியதை இன்றுவரை நான் மறக்கவில்லை.

— எஸ். சோமசுந்தரம், ஹைதராபாத்.

### பெண் பார்க்க வந்தால்....

கல்லூரி வாழ்க்கையின் கடைசி நாள். பிரிவுபசாரவிழாவின்போது விடைபெற்றுச் செல்லும் ஒவ்வொரு மாணவியையும் மேடைக்கு அழைத்து ஒவ்வொருவிதமாக நடிக்கவோ, பாடவோ, ஆடவோ சொன்னார்கள். எனக்குத் தரப்பட்ட தலைப்பு, 'உன்னைப் பெண் பார்க்க வந்தால் என்ன செய்வாய்?' என்பது. ஒரு நிமிடம் திகைத்தேன். பிறகு சட்டென அங்கு நின்றிருந்த கல்லூரி முதல்வரின் காலில் விழுந்து நமஸ்கரித்தேன். ஒரே கைத்தட்டல்! கலாட்டா!

— உஷா கோபால், சென்னை—4.

### கௌரவம் பாராத ஆசிரியர்

எங்கள் விஞ்ஞான ஆசிரியர் இளைஞர்; துடிப்பானவர்; கண்டிப்பானவர். கடைசி நாளன்று எல்லா மாணவர்களையும் தம்மைப் பற்றிய அபிப்ராயத்தை ஒரு தாளில் எழுதித் தருமாறு சொன்னார். நான் 'சயன்ஸ் வாத்தியாரான நீங்கள் மாணவர்களை செவிட்டில் அறையலாமா? உங்கள் முரட்டுத் தனத்தால் செவிப்பறை கிழிந்துவிட்டால் என்ன செய்வீர்கள்?' என்று எழுதிக் கொடுத்தேன். அதை வகுப்பில் படித்த அவர் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு இனி அப்படிச் செய்ய மாட்டேன் என்றும் உறுதி கூறினார். இப்போதும் ஆசிரியராகப் பணியாற்றும் அவர் முன்போல் முரட்டுத்தனமாக நடந்து கொள்வதில்லை என அறிகிறேன்.

— ஜி. டி. ராஜா, சென்னை—28.

### செய்நன்றி!

கடும் வறட்சியினால் அவ்வாண்டு விவசாயத்தில் பெரும் நஷ்டம். கல்லூரி இறுதித் தேர்வுக்குப் பணம் கட்ட இயலாமல் கிராமத்து மாணவர்கள் தவித்தபோது நாங்கள் 20 பேர் சேர்ந்து 15 நாட்களுக்கு மதிய உணவு சாப்பிடாமலிருந்து, அதில் மிச்சம் பிடித்த பணத்தை அவர்களிடம் கொடுத்துப் பரீட்சைக்குப் பணம் கட்ட உதவினோம். அடுத்த ஆண்டு அமோக விளைச்சல் கண்டதால் தானியங்களும் பழ வகைகளும் எங்கள் வீடுகளைத் தேடி வந்தபோது திக்குமுக்காடிப் போனோம்.

— எஸ். துரை, குறும்பூர் அஞ்சல்.

### என்ன வார்த்தைகள்!

கல்லூரிக்குச் செல்லும் வழியில் கால்களை இழந்த சிறுவன் ஒருவன் இருப்பான். என் தோழி அவனுக்குத் தினமும் சில்லறைக் காசு கொடுப்பாள். கடைசி நாளன்று காசை வாங்கிய சிறுவன், 'உங்களை இனி பார்க்க முடியாது அக்கா!' என்று வருத்தத்தோடு சொன்னான். அவன் சொன்ன வார்த்தைகள் அப்படியே பலித்துவிட்டன! ஆமாம்! என் தோழி கல்லூரி ஆண்டு விழா நாடகத்தில் நடித்துக் கொண்டிருந்தபோது ஸ்க்ரீன் கட்டை அறுந்து போய்த் தலையில் விழுந்ததால் தலத்திலேயே இறந்துவிட்டாள்!

— டி. உஷா ஞானம், கடலூர்.

### புதிய வாழ்க்கை

கடைசி ஆண்டு பரீட்சைக்கு இரண்டு மாதங்களுக்கு முன் ஹாஸ்டலில் நடந்த கொலை சம்பவத்தையொட்டி கல்லூரியிலிருந்து எந்தவித விசாரணையுமின்றி நீக்கப்பட்ட பலருள் நானும் ஒருவன். கல்லூரி முதல்வரின் காலில் விழுந்து கெஞ்சினேன். என் பௌதிகப் பேராசிரியரின் சிபாரிசின் பேரில் கல்லூரிக்குள் மீண்டும் நுழைய அனுமதி கிடைத்தது. பரீட்சையும் முடிந்து ரிஸல்ட் வந்தது — நான் பல்கலைக் கழகத்திலேயே முதலாவதாகத் தேறியிருந்தேன். கல்லூரி முதல்வர் பழையனவற்றை மறந்து புதிய வாழ்க்கை தொடங்கச் சொல்லி வாழ்த்தி, அருமையான சிபாரிசுக் கடிதமும் கொடுத்தார்.

— சி. ஜெயபாலன், சென்னை—40.

வாசகர் பங்கு

## ஜாதித் திமிர் ஒழிந்தது!

என் வகுப்பில் தாழ்த்தப்பட்ட பிரிவைச் சேர்ந்த இரண்டு மாணவர்கள் உண்டு. நான் உயர் ஜாதி என்கிற திமிரில் அவர்களுடன் நான் பேசியதே கிடையாது. கடைசி தினத்தன்று அந்த இருவரும் என்னிடம் வந்து, "அண்ணே! மூன்று வருடம் ஒரே வகுப்பில் நாம படிச்சிருக்கோம். இதுவரையில் ஒரு தடவைகூட நீங்கள் எங்களோட பேசின தில்லே! நாங்கள் என்ன பாவம் செய்தோம்?" என்று உருக்கமாகப் பேசி என் கரங்களையும் பற்றிக் கொண்ட போது நெகிழ்ந்து போனேன். என் உயர்வு மனப்பான்மையும் அன்றோடு ஒழிந்தது.

— இரா. ஏகராஜ் சாமுவேல்,
பம்பாய்—78.

## வாழ்நாளெல்லாம் மறக்க முடியாது

தன் அன்பைப் பலமுறை, பல வழிகளிலும் என்னிடம் வெளிப்படுத்தியிருந்த காலேஜ் மேட் ஒருவர் கடைசிநாளன்று தனிமையில் என்னிடம் "என் எதிர்காலமே உங்கள் கையில்தான் இருக்கிறது. அதைஒளிமயமாக்குவதோ, ஒன்றும் இல்லாமல் ஆக்குவதோ உங்கள் விருப்பம்" என்று கூறி, தாம் மேல் படிப்பு முடிக்கும்வரை தமக்காகக் காத்திருக்கும்படி கேட்டுக் கொண்டார்.









மறுப்பேதும் சொல்லாமல் அவருக்காகக் காத்திருந்தேன். சொன்னபடியே படிப்பு முடிந்து, ஆசிரியப் பணியில் அமர்ந்ததும் என்னைத் தேடி வந்து திருமணம் செய்து கொண்டார். அந்தக் கடைசி நாளை வாழ் நாளெல்லாம் மறக்க முடியாது.

— கஸ்தூரி சுப்பராயன், மடகாடிப்பேட்.

## தனிமையில் அழுதேன்!

பள்ளியிறுதி நாளன்று உற்சாக மிகுதியில் மாணவர்கள் ஒருவர் மீது ஒருவர் இங்கையும், வாழைச் சாறையும் தெளித்துக் கொண்டிருந்தனர். என் தூய வெள்ளைச் சட்டை மீது வாழைச் சாறு தெளிக்கப்பட்டது. அப்போது நான் சிரித்துவிட்டாலும் தனிமையில் மிகவும் நொந்து போய் அழுதேன். காரணம், நான் தந்தையற்ற ஏழை. கடைசி தினத்திலாவது பளிச்சென்று தோன்ற வேண்டும் என்ற எண்ணத்துடன் வெள்ளைச் சட்டையை ஒருவரிடம் கெஞ்சிக் கேட்டு இரவல் வாங்கி அணிந்திருந்தேன். கடன் கொடுத்தவரிடம் அன்று பெற்ற திட்டும் அந்தக் கடைசி நாளும் பசுமையாகவே நினைவிருக்கின்றன.

— எம். ராதா கிருஷ்ணன், வாணியம்பாடி

## 'அறுவை'ப் பட்டம்!

பட்டப் படிப்பு முடிந்து பிரிவுபசார விழா. தோழி ஒருத்தி கவிதை நடையில் சொற்பொழிவு ஆற்றினாள்: 'கல்லூரிப் பட்டம் வேலைக்கு மட்டும்! காதலிப் பட்டம் திருமணம் எட்டும்! மணம் முடிந்தாலோ மனைவி பட்டம்! அடுத்த ஆண்டோ 'அம்மா' பட்டம்! முடிவில் பெறுவதோ பாட்டி பட்டம்...' என்ற ரீதியில் தொடர்ந்தவளை இடைமறித்தேன். 'நீ இப்படியே பேசினால் உடனே உனக்கு 'அறுவை'ப் பட்டம் அவசியம் கிட்டும்' என்றேன். அரங்கமே சிரிப்பு வெள்ளம்.

— நடாதூர் வி. திருமகள்,
பாண்டிச்சேரி—8

## மீண்டும் நண்பர்கள்

என்னுடன் படித்த வனிதா என்ற பெண்ணும் நானும் மிகச் சிறந்த நண்பர்களாக இருந்தோம். ஏதோ ஒரு சிறு காரணத்தால் மனஸ்தாபம் ஏற்பட்டுப் போய் ஒருவரோடு ஒருவர் பேசுவதையே நிறுத்திவிட்டோம். கடைசி தினத்தன்று நானே அவளை அணுகி நண்பர்களாகப் பிரிய வேண்டும் என்று கோரி மன்னிப்புக் கேட்டேன். அவள் உணர்ச்சி வசப்பட்டுப் போய் என் கைகளைப் பற்றிக் கொண்டு அழுதுவிட்டாள். மீண்டும் நண்பர்கள் ஆனோம். இப்போது அவள் திருமணமாகி ஆஸ்திரேலியாவில் வாழ்கிறாள். மாதம் ஒருமுறை தவறாமல் கடிதம் எழுதுகிறாள்.

— ராஜப்பன் அசோக்குமார்,
பட்டுக்கோட்டை



**ப்ளோப்ளாஸ்ட் வழங்கும் வி.ஐ.பி. ஸூட்கேஸைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறுபவர்:**

S. Sankara Subbu,
Accountant,
Sub Treasury,
Tiruchendur 628 215

## பாப்பாவுக்குக் கல்யாணம்!

உருவத்தில் சிறியவளாய், மிரண்ட பார்வையுடன் இருந்த எனக்குக் கல்லூரி விடுதியில் 'பாப்பா' என்று பெயரிட்டிருந்தார்கள். என் அறைத் தோழிகள் திருமணத்தைப் பற்றியும் இதர 'பெரியவர்கள்' விஷயம் பற்றியும் தங்களுக்குள் பேசிக்கொள்ளும் போது நான் வந்தால் உடனே பேச்சை நிறுத்திவிடுவார்கள். என்னை ஒரு குழந்தையைப் போல் நடத்திய அவர்களுக்குக் கடைசி நாளன்று ஒரு மாபெரும் அதிர்ச்சி: 'நீங்கள் நினைப்பது போல் நான் பாப்பா இல்லை. ஒவ்வொரு மாதமும் என்னைத் தேடி வரும் 'விஸிட்டர்' — நீங்கள் கூடப் பார்க்க நன்றாக இருக்கிறார் என்று விமர்சிப்பீர்களே, அதே விஸிட்டர்தான் — வேறு யாரும் இல்லை, எனக்கென்று நிச்சயிக்கப்பட்டவர்தான். அடுத்த மாதம் எங்கள் திருமணம். பத்திரிகை அனுப்புகிறேன். வந்து சேருங்கள்' என்றேன். அவர்கள் முகத்தில் ஈயாடவில்லை!

— பூமணி, கல்கத்தா.

## திகைக்க வைத்தவர்!

எங்கள் விளையாட்டுப் போக்கை அனுசரித்து, அன்புடன் பாடம் நடத்தி வந்தார் அந்தப் பேராசிரிய இளைஞர். பிரிவுபசார விழாவில் அவரைப் பாடச் சொல்லிக் கேட்டோம். 'உன்னை ஒன்று கேட்பேன்...' என்ற சினிமாப் பாடலைப் பாடினார். HMT கடிகாரம் ஒன்றைவலுக்கட்டாயமாக அவருக்குப் பரிசளித்தோம். கடைசி நாள் வகுப்பிற்குச் சென்றபோது ஒவ்வொரு மாணவனுக்கும் ஒரு விலையுயர்ந்த சேம்பர்ஸ் டிக்ஷனரியைக் கொடுத்து எங்களைத் திகைக்க வைத்துவிட்டார் அவர்.

— எஸ். சங்கரசுப்பு, திருச்செந்தூர்.

மின்னும்
மேனி மெருகுக்கு
ரெக்ஸோனா

மின்னி மிளிரும் மேனி...என்நாளும்
உங்கள் பொன்னான கனவு...நிறைவேற
வரமளிப்பது ரெக்ஸோனா.

சரளம், கருவா, கிராம்பு, ஹபுஷா
(தேவதாரம்) ஆகிய நாலு வகை
இயற்கைத் தைலங்களின் நற்கலவையான
ரெக்ஸோனா...சருமப் பராமரிப்பிற்கு
இயல்பான வழியாகும்.






# ரெக்ஸோனா

**உங்கள் மேனியை மென்மையோடு மெருகு மிளிர வைக்கிறது.**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.




# அடுத்த முறை, ஸன்ஃப்ளவர் பாதுகாப்பு கவசம் மூலம் உங்கள் குடும்பத்தைக் காத்திடுங்கள்.



## ஸன்ஃப்ளவர் இகானமி பேக். நீங்கள் இழப்பதோ சில சில்லறை காசுகளும் சில்லறை வனஸ்பதியும். பெறுவதோ அதி தூய்மை.

WPL/25 35

உங்கள் குடும்பத்திற்கு, முற்றிலும் பாதுகாப்பானதையும், தூய்மையானதையும் கொடுங்கள்: ஸன்ஃப்ளவர் ப்ராண்ட் வனஸ்பதி. விட்டமின் A மற்றும் D செறிந்த, ஊட்டமிக்க, ஆரோக்கியமான வனஸ்பதி உங்களுக்குக் கிடைக்க, ஸன்ஃப்ளவர் பாதுகாப்பு கவசத்தால் ஸீல் செய்யப்பட்டு, பேக் செய்யப்பட்டு வருகிறது.






# ஸன்ஃப்ளவர்

ப்ராண்ட் வனஸ்பதி

இதை விடச் சிறந்தது தூய நெய் மட்டுமே.

கிலோ மற்றும் ½ கிலோ பேக்குகளில் கிடைக்கிறது.

WIPRO LTD - Closer to the consumer



# நெருப்பாக நீ

ஆரம்பத்தில் இரண்டு நாட்களுக்குத்தான் தடுமாற்றம். அதற்குப் பின், இந்தக் கிராமத்திலேயே பிறந்து வளர்ந்தவள் போல ஒட்டி விட்டாள் இன்பா.

முதல் இரண்டு நாட்களுக்கு மிடியும், பேண்ட் ஷர்ட்டும் அணிந்து வெளியே போன வளைக் கிராமத்து மக்கள் வெறிக்க வெறிக்கப் பார்த்தார்கள். முதுகுத் தண்டில் ஐஸ் கட்டியை வைத்தாற் போல நெளிந்தார்கள்.

மூன்றும் நாள், இன்பாவின் அலங்காரத்தைப் பார்த்து லோகநாதனே பிரமித்து விட்டார்.

பட்டுப் பாவாடை; தாவணி... நீண்ட பின்னல்... ஜிமிக்கி, மாட்டல், கைநிறையக் கண்ணாடி வளையல்கள்... நெற்றியில் சின்னதாய்த் திலகம்...

'அடடா... என் கண்ணே பட்டுடும் போல இருக்கே...'

லோகநாதன் தவித்துப் போகிறார்.

''இன்னிக்கு இன்பாவைக் கோவிலுக்கு அழைச்சிட்டுப் போயிட்டு வர்றேம்பா...''

தூய வெள்ளையில் பைஜாமாவும், ஜிப்பாவுமாக நந்து வந்து நின்ற போது — பெருமை பிடிபடவில்லை அவருக்கு...

இருவரும் வண்டியிலேறும் வரையில் வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருக்கிறார்.

மாதையனுக்குக் கூட அன்று உற்சாகம் கரை புரள்கிறது...

''ஆயிரம்தான் சொல்லுங்க... இதுல இருக்கிற அழகு வேறே எதுலேயும் கிடையாதுங்க!''

வாய்விட்டு, உரிமையுடன் பாராட்டுகிறான். அவன் வண்டியைக் கிளப்பும்போதே — டாக்டரின் கார், பங்களா 'கேட்'டுக்குள் நுழைகிறது...

டாக்டரைப் பார்த்ததுமே, மாதையனின் முகத்தில் கொஞ்சம் உஷ்ணம் எட்டிப் பார்க்கிறது...

மயிலைகளை விரட்டும் சாக்கில், வார்த்தைகளைச் சவுக்காய் வீசுகிறான் அவன்...

''ஹேய்... கிளம்புங்கடா... வரவர மனுசங்க புத்தி மாட்டுக்கும் வந்திடுச்சு. பின்னே பாருங்க தம்பி... ஜமீன் வீட்டு உப்பைத் தின்னு, மாடுங்க கூடக் கோண வழியில் போக ஆரம்பிச்சிடுச்சு. ஹே... ஹேய்... சவுக்கைச் சுழற்ற ஆரம்பிச்சா, முதுகுத் தோலு சுழண்டுடும். மருவாதியா நடைய எட்டிப் போட்டு...

டாக்டர், காரிலிருந்து இறங்கி, தன்னைத் தாண்டிச் செல்லும் வண்டியை வெறிக்கப் பார்த்து விட்டு, நகருகிறார்...

ரஸ்தாவை எட்டிப் பிடித்ததும் மாதையன், தனக்குள் முனகிக் கொள்கிறான்.

''வெடு வெட்டிப் பய... யார் யாருக்கோ எமன் வர்றான்... உனக்கு வர மாட்டேங்கறானேடா பாவி!''

நந்து, இன்பாவிடம் ஆங்கிலத்தில் சொல்கிறான்:

"மாதுவுக்கு டாக்டரைக் கண்டாப் பிடிக்காது...
"ஏன்?"
"அவர்தான், எங்க பெரியம்மா காணாமப் போனதுக்குக் காரணமாம். அவர், இந்தக் குடும்பத்துல தலையிட்டதுக்கு அப்புறம்தான், அப்பா, அழகான பெரியம்மாவை விட்டு, எங்க அம்மாவை ரெண்டாந்தாரமாக் கைப் பிடிச்சாராம்..."
"எனக்குக் கூட அந்த மனுஷனைப் பிடிக்கலே!"
இன்பா சொல்ல, நந்து அவளை வியப்புடன் பார்க்கிறான்.
"எனக்கென்னமோ, உங்க அப்பா, உங்க அம்மாவையும், அண்ணாவையும் வேற யாராவது ஒரு பெரிய டாக்டர்கிட்டே காமிக்கலாம்னு தோணுது... இவர் நிஜமாவே டாக்டர்தானா... இல்லே கம்பவுண்டருக்குப் படிச்சிட்டு, டாக்டர்னு போர்டு மாட்டிட்டிருக்காரான்னு சந்தேகம் கூட வர்றது..."
"நானும் எத்தனையோ தடவை சொல்லிட்டேன்... அப்பா இவரை விட்டு வேறே டாக்டரை மாத்த மாட்டேங்கறார். அப்பாவோட ஒரே கெட்ட குணம் இதுதான். ஒருத்தரையும் லேசுல நம்ப மாட்டார். நம்பிட்டா, அப்புறம் உயிரே போனாலும் தன்னை மாத்திக்க மாட்டார்..."
மாதையனுக்கு, இவர்கள் பேசிக் கொள்வது புரியாவிட்டாலும், பேச்சு டாக்டரைப் பற்றியதுதான் என்பது மட்டும் புரிகிறது.
"தம்பீ... இந்த டாக்டருக்கு ஒரு மக உண்டே... ஞாபகமிருக்கா?"
"யாரு... மல்லிகாவைச் சொல்றியா... நான் எப்பவோ ரெண்டு மூணு தடவை பார்த்திருக்கேன்..."
"அதை உங்களுக்குக் கட்டி வைக்கணும்னு தான் டாக்டர் இங்கே வட்டம் போட்டுட்டு இருக்காரு... சாக்கிரதை. சொல்லிப்புட்டேன்..."
இன்பா, நந்துவைப் பார்த்துக் கண்களைச் சிமிட்டுகிறாள்.
"இங்கே எனக்கு இப்படியொரு போட்டி இருக்குன்னு நீ சொல்லவே இல்லையே!"
"ஐயய்யே... அவளா..."
நந்து கொஞ்சம் தடுமாறுகிறான். மாதையனிடம் சிடுசிடுக்கிறான்.
"என் மாது, அந்தப் பொண்ணை நான் எப்பப் பார்த்தது....?"
"உங்களுக்குப் பன்னெண்டு வயசா இருக்கறப்ப...
நந்து, இன்பாவின் பக்கம் திரும்புகிறான்.
"கேட்டியா... அப்ப அந்தப் பொண்ணுக்குப் பத்து வயசு இருக்கும்... அப்பவே அது மகா ஸ்டைலு... ஏகத் திமிரு... அப்பாவோட ஒரு தடவை எங்க வீட்டுக்கு வந்துட்டு, நல்ல ஸ்வீட்டைப் பிடிக்கலையின்னு நாய்க்குப் போட்டது.. அல்ட்டல்!"
இன்பா, அவனது பதற்றத்தைக் கண்டு கலகலவெனச் சிரிக்கிறாள்.
பெருமாள் கோவிலுக்குள் நுழையும் போதே மாதையன் சொல்கிறான்.
"பெரியம்மாவை அழைச்சிட்டு வந்ததுக்கு அப்புறம் இன்னிக்குத்தாம்மா மனத் திருப்தியோட கோவிலுக்குள்ள வர்றேன்... அவங்க கூட வந்தா... அதோட மதிப்பே தனி... இந்தக் கோவிலுக்கு அவங்க நிறைய செஞ்சிருக்காங்க... நிலம் கூட எழுதி வச்சிருக்காங்க..."
"உள்ளே, பெருமாள் சந்நிதியில ஒரு நவநீதகிருஷ்ணன் இருக்கும் பாருங்க... கையில் எடுத்து வெச்சிட்டுக் கொஞ்சலாம் போல..."
"இங்க வந்தா, சந்நிதியில் அப்படியே தரையில் உட்கார்ந்துடுவாங்க அவங்க... மடியில் ஒரு பட்டுத் துணியை விரிச்சு, அதும் மேல அந்தக் கிருஷ்ண விக்கிரகத்தை வெச்சுட்டு மணிக்கணக்கா உட்கார்ந்திருப்பாங்க!"
நந்துவிற்குக் கூட மாதையனின் மீது 'சுள்'ளென்று கோபம் வருகிறது...
'விவரம் புரியாத மனுஷனா இருக்கானே... இவகிட்ட என்னைப் பத்தியோ, எங்க அப்பாவோட பெருமைகளைப் பத்தியோ பேசாம... சும்மா, 'பெரியம்மா,





பெரியம்மான்னு, எப்பவோ ஓடிப் போன வளைப் பத்தியே பேசிட்டிருக்கானே...''

இந்தக் கோபம் — வார்த்தைகளில் தெரிக்கிறது...

''ஏன் மாது — பெரியம்மாவைத் தவிர — மத்தவங்க யாரும் மனுஷங்களாத் தெரியலையா...?''

''எல்லாரும் மனுஷங்கதான். ஆனா, அவங்க தெய்வங்க...''

இன்பா, நந்துவிடம் சிரித்தபடி சொல்கிறாள்.

''அவனைப் பேச விடு நந்து. உங்க பெரியம்மாவைப் பத்திப் பேசறப்ப, அவன் முகத்துல வர்ணக் கலவையா வெளிப்படற ராஜ விசுவாசத்தை நான் ரொம்ப ரசிக்கிறேன்.''

வந்தது முதலே ஒன்றைக் கவனித்துக் கொண்டுதானிருக்கிறாள் இன்பா.

''அந்த அம்மா மகராசி...''

— இப்படி மாதையன் மட்டுமின்றி, அவன் சந்தித்த நாற்பது வயசுக்கு மேற்பட்ட ஆண், பெண்கள் கூட, மங்களாம்பாளைத் தான் சொல்கிறார்களே தவிர — இன்றளவும் லோகநாதனுடன் வாழ்ந்து கொண்டிருக்கும் புவனாவை அல்ல...

ஏன் இப்படி...?''

இவள் வெறும் பொம்மையாக வளைய வருவதாலா?

இதுபற்றி நந்துவிடம் கேட்ட போது, அவன் வருத்தத்துடன் சொல்கிறான்:

''எங்க அம்மா ரொம்ப நல்லவதான் இன்பா. ஆனா, எங்க அப்பாவோட இளையாளா வந்ததுதான் அவ செஞ்ச ஒரே தப்பு. சாதாரணமா, மூத்தவ உயிரோட இருக்கிற சமயத்துல இளையவ ஒருத்தி வந்தா, யாருக்



குமே அவன்மேல் எரிச்சலும், கோபமும் வர்றது சகஜம்தானே. எங்க அம்மாவோட பின்னணியும் சரியில்லே. அந்தக் காலத்துல நாடகங்கள்லே நடிச்சிட்டிருந்தவ. எங்க அப்பாவைக் காதலிச்சதைத் தவிர, அவ வேற எந்தத் தப்பும் பண்ணலே!''

கோவிலிலிருந்து புறப்பட்ட அவர்கள் — கோவிலேச் சுற்றியுள்ள பசுமையான வயல் வெளிகளைப் பார்வையிட்டபடி நடக்க...

இன்பாவின் மனசு எங்கோ வட்டமிடுகிறது. கையோடு கொண்டு வந்திருந்த கேன்வாஸ் துணியைச் சட்டத்தில் பதித்து — கண் முன்னே விரிந்து கிடக்கும் அற்புதங்களைச் சிறைப்பிடிக்க முயல்கிறாள் அவள்.

நந்துவிற்கு வரையத் தோன்றவில்லே.

தன் தாய் தந்தையைப் பற்றி — தனக்குத் தெரிந்த நல்ல விஷயங்களை எல்லாம் அவளிடம் கொட்டுகிறான்.

''இளையவ வந்தா, மூத்தவளை அந்த வீட்டுலே வாழ விட மாட்டாங்கன்னு சொல்லுவாங்க இன்பா. ஆனா எங்க அம்மா அப்படியில்லே. எவ்வளவோ நாகரீகமா, தனக்குக் கொடுக்கப்பட்ட சலுகையை மாத்திரம் ஏத்துக்கிட்டு வாழ்ந்தாங்க...''

அப்பாவுமே, அம்மாவை விரும்பினாரே தவிர — அதுக்காக மூத்தவளை அடிச்சு விரட்டலே! இன்னும் பார்க்கப் போனா, பெரியம்மா இருந்த வரைக்கும், ஊர்லே எந்தப் பொது நிகழ்ச்சியானாலும் அப்பா, பெரியம்மாவோடதான் போவாங்களாம்...''

இன்பாவின் கண்கள், எங்கோ கனவில் மிதக்கின்றன.

''நந்து... நீ, உன் பெரியம்மாவைப் பார்த்த ஞாபகம் இருக்கா...?''

''இல்லே... ஆனா, அவங்க என்னேயும் என்னோட அண்ணன்களேயும் ரொம்பப் பிரியமா பார்த்துக்கிட்டதா அப்பா சொல்லுவார்...''

''அவங்களோட போட்டோ இருக்கா?''

''இருக்கிறதா நினைவில்லே. அப்பாவுக்கு தன் பெண்டாட்டி இப்படி முகத்துல கரிய வாரிப் பூசற மாதிரி ஒரு காரியத்தைப் பண்ணிட்டு ஓடிட்டாளேங்கற வருத்தம். அதனாலேயே அவங்களோட போர்ட்ரெய்ட்டை பங்களாவுல மாட்டக் கூடாதுன்னு சொல்லிட்டாரு. நீ பார்த்திருப்பியே... எங்க பாட்டிகள் எல்லாருடைய படமும், அந்தக் கல்யாணக் கூடத்துல மாட்டியிருக்கும். பெரியம்மா படம் மட்டும் அதுல இருக்காது...''

இன்பா சட்டெனத் தலையை உயர்த்தி நந்துவைப் பார்க்கிறாள்.

நீ கூட உங்க பெரியம்மா, அப்பாவை ஏமாத்திட்டு எவன் கூடவோ ஓடிட்டதாகவா நினைக்கறே...?''

இதற்கு என்ன பதிலேக் கூறுவது எனப் புரியாமல் ஒரு கணம் குழம்புகிறான் அவன்.

''நீயும் நானும் தனியா இருக்கிற சமயத்துல இந்தப் பெரியம்மா, அப்பா, அம்மா — இவங்களைப் பத்தின பேச்சே அநாவசியம். நம்மைப் பத்திப் பேசுவோமே...''

அவன் பேச்சைத் திசை திருப்ப முயலுகிறான்.

''நம்மைப் பத்திப் பேசறதுக்கு முன்னாலே... நம்மை உருவாக்கி, ஆளாக்கி, இப்படி வயல் வரப்பை ரசிக்கிற அளவுக்கு ரசனையை வளர்த்த — மனுஷங்களைப் பத்தியும் கொஞ்சம் நன்றியோட நினைச்சுப் பார்க்கணும் இல்லேயா?''

''ஓ. கே... அப்ப எங்க அம்மா, அப்பாவைப் பத்திப் பேசலாம். நமக்குக் கொஞ்சம் கூட சம்பந்தமில்லாத அந்த மங்களாம்பாளைப் பத்திப் பேச வேண்டாம்!''

''உனக்குச் சம்பந்தமில்லே... ஆனா, எனக்கும் மங்களாம்பாளுக்கும் சம்பந்தமே இல்லேன்னு நீ எப்படி சொல்ல முடியும் நந்து?''

அவனது புருவம் கேள்விக் குறிகளாய் வளைய — அவள், தனது ஓவியத்தில் கண் பதித்தபடி சொல்கிறாள்:

''அநியாயமா ஒரு பொண்ணு மேலப் பழியைச் சுமத்தறது தப்பு நந்து. உங்க அப்பாவைக் கல்யாணம் பண்ணிக்கிட்ட குத்தத்துக்காக — அந்தப் பொண் மேல் இல்லாத பழியெல்லாத்தையும் போடறதா...? எனக்கென்னமோ, மங்களாம்பா ஓடிப் போயிட்டதா தோணலே!''

''பின்னே?''

''செத்துப் போயிட்டா!''

''ஏய்! என்ன உளர்றே...?''

இன்பா, தன் கையிலிருந்த பேலட்டில் சிவப்பு வர்ணத்தைக் குழைத்துக் கொண்டே சொல்கிறாள்:

''ஆமா... அவ செத்துப் போய், உங்க பங்களாவிலேயே அலைய வர்ற மாதிரி தோணறது எனக்கு!''

''படிச்ச பொண்ணா இருந்துட்டு இது என்ன பேத்தல் இன்பா?

''ஒரு விஷயத்தை எப்பேர்ப்பட்ட அறிவாளியும் ஒத்துட்டுதான் ஆகணும் நந்து... எந்த ஒரு அப்பாவி ஜீவனும் பழியைச் சுமக்க விரும்பாது... அதுவும் ஒரு பொண்ணு மேல் சுமத்தப்படற பழி — பொண் குலத்து மேலேயே சுமத்தப்பட்ட பழி மாதிரி...''

இவர்களது சம்பாஷணை காதில் விழ முடியாத தொலைவில் உட்கார்ந்திருந்த மாதையன் — ஏதோ பாட்டைத் தனக்குள் முணுமுணுக்கிறான்.

எத்தனை தடவை மங்களாம்பாளே, இந்தப் பெருமாள் கோவிலுக்கு அழைத்து வந்திருக்கிறான் அவன்... மாட்டு வண்டியின் சலங்கைச் சத்தத்தோடு இணைந்த மாதிரி — மிருதுவான குரலில் பாடிய பாட்டுக்கள்... இன்றளவும் காதில் ஒலித்துக் கொண்டிருப்பதாய்...

''சேர்ந்து இருந்தோமே, சேலத்துக்
கெண்டை போல,
நாரை வந்து மீனேத் தொட நைந்த
தய்யா நம் உறவு...

மாதையன் நரை மீசையைத் தடவியபடி தனக்குள் சொல்கிறான்...

'மவராசி... உன் ஆயுசுக்குள்ள மறுபடியும் வருவேன்டா மாதுன்னு கனவுல சொன்னீங்க... எப்ப வருவீங்க தாயி?

(தொடரும்)

## வாய் துர்நாற்றத்தை தடுத்திடுவீர். பற்சிதைவை எதிர்த்திடுவீர்.

# கோல்கேட்டின் பாதுகாப்பு வளையத்தை பெற்றிடுவீர் !

தவறாமல் கோல்கேட் உபயோகிப்பதால்,
உங்கள் குடும்பத்தினரின் பற்களுக்கு ஆரோக்கியம், வலிமை, புத்துணர்ச்சி
தரும் தூய சுவாசம் கிடைக்கிறது.
இதுவே கோல்கேட்டின் பாதுகாப்பு வளையம்.

நீங்கள் பல் துலக்கும் ஒவ்வொரு முறையும்
கோல்கேட்டின் நம்பகமான ஃபார்முலா
செயல்படுவது எப்படி என்றால்...



உணவுத் துணுக்குகள் பற்களுக்கிடையே
சிக்கிக் கொள்வதால் துர்நாற்றத்தையும்,
பற்சிதைவையும் உண்டாக்கும்
பாக்டீரியாக்கள் வளருகின்றன.



கோல்கேட்டின் ஒப்பற்ற செயல்புரியும்
நுரை ஆழ ஊடுருவிச் சென்று,
துர்நாற்றத்தை ஏற்படுத்தும் உணவுத்
துணுக்குகளையும் சிதைவு ஏற்படுத்தும்
பாக்டீரியாக்களையும் அகற்றுகிறது.



முறையாக கோல்கேட் கொண்டு பல்
துலக்குவதால் புத்துணர்ச்சி தரும்
தூய சுவாசமும், வலிமை மிகுந்த
ஆரோக்கியமும் தருகிறது.

ஒவ்வொரு முறையும் சாப்பிட்ட உடன்,
உங்கள் குடும்பத்தினர் தவறாமல் கோல்கேட்
கொண்டு பல் துலக்கட்டும்.
வாய் துர்நாற்றத்தை தடுத்திடுவீர்.
கோல்கேட்டின் பாதுகாப்பு வளையத்தை பெற்றிடுவீர்.




B84.55 Tam

கோல்கேட்டின் புத்துணர்ச்சி தரும்
பெப்பர்மெண்ட் சுவை உங்களுக்கு விருப்பமானது !

எந்த வெளிநாட்டிற்குச் சென்றாலும் தங்குவதற்குத் திட்டவட்டமான ஏற்பாடு களைச் செய்து கொள்ளாமல் போய் நிற்பது அசட்டுத்தனம் என்பதை சிங்கப்பூரில் அன்று இரவு பத்து மணிக்குக் கால் வைத்ததும் புரிந்து கொண்டேன்.

"என்னை அறிந்த ஒரு நண்பர் கவலையே படாதீர்கள். என் பிள்ளை அங்கே இருக் கிறான். நீங்கள் தாராளமாக அங்கே இருக்க லாம்" என்று விலாசம் கொடுத்திருந்தார். அவர் அவ்வளவு நிச்சயமாகச் சொல்லவே நான் உடனடியாக ஒரு கடிதம் அவர் மகனுக்கு எழுதியிருந்தேன். நான் வரும் தேதியைக் குறித்து விமான நிலையத்தில் சந் திக்கும்படியும் கேட்டிருந்தேன்.

சிங்கப்பூரில் இறங்கிய சக பிரயாணிகள் எல்லாரும் கிளம்பிப் போய்விட்டார்கள். விசுவநாதனைக் காணவில்லை. என்னிடம் வேறு விலாசமில்லை. விசுவநாதனுடைய நம் பருக்கு டெலிபோன் செய்தேன். மறுமுனை யில் மணி அடித்த வண்ணம் இருந்தது. யாரும் எடுக்கவில்லை. நானாக விசுவநாதனின் வீட்டிற்குப் போவதைத் தவிர வேறு வழி யில்லை என்று டாக்ஸியில் அமர்ந்து விலா சத்தைச் சொன்னேன்.

டாக்ஸி டிரைவர் நன்றாக ஆங்கிலம் பேசி னார். "அந்த இடம் எனக்குப் பழக்கமில்லை. சற்று விசாரித்துக் கொண்டுதான் போக வேண்டும், மேடம்" என்றார்.

பாதை நீண்டு கொண்டே போயிற்று. எனக்குக் கவலையாகப் போயிற்று.

"அது மறு கோடியில் இருக்கிறது மேடம்" என்றார் டிரைவர்.

அந்தப் பகுதிக்குப் போனபின்பும் கிளைத் தெருக்கள் புரிபடாமல் டிரைவர் தவித்தார். பிறகு, காரிலேயே பொருத்தப்பட்டிருந்த தொலைபேசியின் மூலம் தம்முடைய நிலையத் துடன் தொடர்பு கொண்டு வழியைப் புரிந்து கொண்டு சரியான கட்டிடத்திற்கு முன் டாக்ஸியை நிறுத்தினார்.

இரவு மணி பதினொன்றேகால். நான் அழைப்பு மணியை அழுத்த, கதவு திறந்தது. அப்பால் சிவந்த வாளிப்பான உடம்பாக, ஜட்டி பனியனில் ஒரு வாலிபர் நின்றிருந் தார். கையில் கிரிக்கெட் மட்டை!

நான் குழப்பத்துடன் "இது விசுவநாதனின் வீடுதானே?" என்றேன்.

"ஆமாம்" என்றார் அவர்.

எனக்கு உயிர் வந்தது. "அவர் இருக் கிறாரா?"

"இல்லை."

"எங்கே போயிருக்கிறார்? ஊரில் இல்லையா?"

"ஊரில்தான் இருக்கிறான். எங்கே போயிருக்கிறான், எப்பொழுது வருவான் என்று தெரியாது. இன்று வெள்ளிக்கிழமை அல்லவா? சாதாரணமாக இரவு ரொம்ப நேரம் கழித்துத்தான் வீடு திரும்புவோம். நான் அவனுடன் இந்த வீட்டில் சேர்ந்திருக் கிறேன்."

"எனக்கு விசுவநாதனைத் தவிர சிங்கப் பூரில் யாரையும் தெரியாது. நாளைக்கு வேறு ஏற்பாடு செய்து கொள்வதானாலும், இன்று இரவு நான் இங்குதான் தங்க வேண்டும்!"

"ஓ, யெஸ், தாராளமாக!" என்று அந்த வாலிபர் புன்னகை புரிந்தார்.

நான் டாக்ஸி டிரைவருக்குக் கட்டணத்

# பூமிக்குள் ஓர் உலகம்



• குகைக்கோயிலின் உட்புறத்திலிருந்து நோக்கினால்

தைச் செலுத்தத் திரும்பினேன். பணத்தை வாங்கிக் கொள்ளும்போது ''டூ திங்க் டூ வில் பி ஆல் ரைட் ஹியர் மேடம்?'' என்றார் கரிசனத்துடன். நான் உறுதி அளித்த பிறகே சாமானை வண்டியிலிருந்து எடுத்து உள்ளே வைத்தார்.

நான் படுக்க வசதி செய்து கொடுத்து விட்டு, ''நீங்கள் படுத்துக் கொள்ளுங்கள். நான் கதவைப் பூட்டிக் கொண்டு நீச்சல் குளத்துக்குப் போகிறேன்'' என்று அந்த வாலிபர் கிளம்பிவிட்டார்.

என் அறையைத் தாழ்ப்பாள் போட்டுக் கொண்டு நான் படுத்தேன். எப்படிப்பட்ட இக்கட்டில் வந்து மாட்டிக் கொண்டோம் என்று இரவு முழுவதும் தூக்கம் வரவில்லை.

மறுநாள் விசுவநாதன் என்னிடம் வந்து முந்தையை தினத்துக்காக வருந்தினார். ''உங்கள் கடிதமே கிடைக்கவில்லை'' என்றார்.

என் பிள்ளை தில்லியிலிருந்து டெலிபோன் செய்தான். அடுத்த அரை மணியில் என் மாமாவின் சினேகிதர் மனைவி ரமா பிரஸாத் வந்து என்னைத் தம் வீட்டிற்கு அழைத்துச் சென்றார்.

தங்குவதற்குச் சௌகர்யமான இடம் கிடைத்த நிம்மதியில் நான் அந்த வார இறுதியைக் கழிக்கக் கோலாலம்பூருக்குச் செல்ல முடிவு செய்தேன். அங்கு இந்திய ஹை கமிஷனில் பணிபுரியும் சந்தானம் தம்பதி என் சினேகிதர்கள். சிங்கப்பூரிலிருந்து கோலாலம்பூருக்குச் செல்லும் இரவு ரயில் மிக சௌகர்யமாக இருந்தாலும் ரயிலில் ஏறுவதற்கு முன்பும், இறங்குவதற்குப் பின்பும் கஸ்டம்ஸ் கிளியரன்ஸ் ஆகி மீள்வதற்குள் போதும் போதும் என்றாகிவிட்டது.

மகா நவீனமான சுத்தமான சிங்கப்பூரைப் போல கோலாலம்பூர் இல்லை. இந்தியாவில் ஏதோ ஓர் ஊருக்கு வந்து நின்றாற்போல் எனக்குப் பிரமையேற்பட்டது. அசுத்தமும் ஏழைமையும் நிறையத் தெரிந்தன.

சந்தானத்தின் பிள்ளை மோஹன் ஸ்டேஷனுக்கு வந்திருந்தான். மலேஷிய டாக்ஸி டிரைவர் சிங்கப்பூர் டிரைவரைப் போல் இல்லை. ஏதோ முரட்டுத்தனமாகப் பேசினார். மீட்டர் கட்டணத்துக்கு மேல் வேண்டுமென்றார். 'இவர்களுடன் தகராறு வைத்துக் கொள்ளக் கூடாது' என்று மோஹன் வாயை மூடிக் கொண்டு காசைக் கொடுத்தான்.

இரண்டே நாட்கள்தான் கோலாலம்பூரில் தங்குவதாக இருந்ததால் அங்கு முக்கியமாகப் பார்க்கப்பட வேண்டிய பட்டு குகைக் கோவிலுக்குக் கிளம்பினோம். 'அது ஓர் அற்புத அனுபவம். இருநூற்றி எழுபத்தி இரண்டு படிகள் ஏறி அதற்கு மேல் மலேசியத் தமிழர்களால் கட்டப்பட்டிருக்கும் முருகன் கோவிலை அடையும்போது பிரமிப்புத்தான் ஏற்படுகிறது. சுண்ணாம்புக் கல் குகையில் பல ஆயிரம் ஆண்டுகளாக இயற்கையின் கை செதுக்கியிருக்கும் சித்திரங்களும் தோரணங்களும் வர்ணனைக்கு அப்பாற்பட்டவை. இந்த அழகைக் கண்ட பிரமிப்பில் தான் மலேசியத் தமிழர்கள், இறைவனின் வாசஸ்தலம் இது என்கிற கணிப்பில் இங்கு கோவிலைக் கட்டியிருக்க வேண்டும். பின்புலத்திலும் சுற்றிலும் குகையில் இயற்கை காட்டும் மாயா ஜாலம் அதன் முடிவில்லா அழகாலும், விசித்திரத்தன்மையாலும் நம்மை பிரமிக்கச் செய்து இறைவனின் அலகிலா விளையாட்டின் முன் நம்மை வெறும் தூசாகச் செய்கிறது.

கோவிலுக்குக் கீழே நில மட்டத்தில் குகையைக் குடைந்து கண்காட்சி வைத்திருக்கிறார்கள். திருக்குறளின் செய்யுள்களுக்கு விளக்கம் சொல்லும் பொம்மைக் காட்சிகள் உள்ளன. பதுமைகளின் வண்ணக் கலவைகளும் குழல் விளக்குகளும் என் நோக்கில் கலாபூர்வமாக இல்லை. முருகன் கோவிலு

வாஸந்தி



• பட்டு குகைக் கோவில் படிகளில்....



• டத்தில் இந்திராணி சாமிவேலு

டன் இருந்த அந்த இயற்கைக் கோவிலில் அவை மிகவும் செயற்கையாகத் தோன்றின.

அங்கிருந்து மியூஸியத்துக்குச் சென்றோம். மலேசிய கலாசாரத்தையும் கலைப் பொருள்களையும் மிக நேர்த்தியாக எடுத்துக் காட்டும் அருமையான இடம் இது. ஒரு பகுதியில் சீன மலேசிய கலப்பான 'பாபா கலாசாரம்' என்கிற கலாசார விளக்கம் இருக்கிறது. சீன மரபுகளும் மலேசியப் பண்பாடும் மிக இயல்பாகக்கலந்துபோன ஓர் அழகியகலவை இது. வெற்றிலைப் பாக்கு வழங்கும் வழக்கம் இந்தியாவிலிருந்து வந்து சேர்ந்து கொண்டிருக்கிறது இதில்.

மறுநாள் காலை தமிழ்நேசன் பத்திரிகை அலுவலகத்திற்குச் சென்றேன். சில வருஷங்களுக்குமுன் தமிழ்நேசனில் என்னுடைய தொடர் நாவல் ஒன்று வெளியாகியிருந்தது. நேசன் நிர்வாகக் குழுத் தலைவர் டத்தின் இந்திராணி சாமிவேலுவைச் (அமைச்சர் டத்தின் சாமிவேலுவின் துணைவியார்) சந்திக்க ஆசிரியர் விவேகானந்தன் என்னை அழைத்துச் சென்றார். திருமதி இந்திராணியின் அறைக்குள் யாரும் செருப்பைப் போட்டுக் கொண்டு நுழைவதில்லை. கடவுள் பக்தி நிரம்பிய அவர் தம் அறைக்குள் திரு உருவப் படங்கள் வைத்துப் பூஜை செய்வது தான் காரணம். 'கம்'மென்று ஊதுபத்தி மணம் கமழும் அறையில் உட்கார்ந்து பேசும் போது தற்கால நாகரீகம் செல்லும் போக்கைக் கண்டு அவர் படும் கவலை வெளிப்பட்டது. இளைய தலைமுறை வீடியோ மோகம் பிடித்து அலைகிறார்கள். இறை உணர்வு குறைந்து வருகிறது என்று வருத்தப்பட்டார்.

திங்கட்கிழமை காலை தமிழ் நேசன் தினத்தாளில் அன்று மாலை எனக்குக் கொடுக்கப் படவிருக்கும் வரவேற்பைப் பற்றி அறிவித்திருந்தார்கள். 'அம்பாங் பிலால்' என்ற உணவகத்தில் ஏற்பாடு. ஆறு மணிக்கு நிகழ்ச்சி. ஐந்தரை மணியிலிருந்து 'கொட்டோ கொட்' டென்று வானம் கிழித்துக் கொண்டு மழை பெய்ய ஆரம்பித்துவிட்டது. வரவேற்புரை வழங்க வந்த விவேகானந்தனும் பேச வந்த நானும் மட்டுமே இருக்கப் போகிறோம் என்று நான் நினைத்தேன். பிசாசாய்ப் பெய்த மழையிலும் கூடம் நிரம்பிப் போனது மிக ஆச்சரியமான விஷயமாகத் தோன்றிற்று. கிட்டத்தட்ட அனைவரும் இலக்கியத் துறையில் ஈடுபட்டவர்கள். அவர்களுக்கு இருக்கும் தமிழ்ப் பற்றும் ஆர்வமும் கண்டு நான் நெகிழ்ந்து போனேன். மீண்டும் மலேசியாவுக்கு வந்து அதிக நாள் தங்கி மலேசியத் தமிழர்களைப் பற்றி நெருக்கமாக அறிந்து மலேசிய பின்புலத்தில் நாவல் எழுத வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்கள்.

என் பயணத்தின் கடைசி மூன்று நாட்களைக் கழிக்க மீண்டும் சிங்கப்பூருக்குத் திரும்பினேன்.

(தொடரும்)

## வாசகர் கருத்து




* சென்ற வருடத்தைவிட இந்த வருடம் சிறப்பாகவே அமைந்திருந்தது விடுமுறை மலர். பசுமையான பக்கங்கள் நெஞ்சுக்குச் சுகமாய் இருந்ததென்றால் தமிழ் மகனின் நிகழ்காலத்தைத் தேடிய கவிதை நெஞ்சில் சோகத்தை நிறைத்தது. மொத்தத்தில் அருமையான மலர்.

— மேகதூதன், ஸ்ரீரங்கம்.

* டெஸ்ட்டில் நுழைந்ததுமே தொடர்ந்து மூன்று சதங்களை அடித்து உலக சாதனை ஏற்படுத்தி இந்தியாவிற்குப் பெருமை தேடித் தந்த அசகாய சூரர் அசாருதீனின் வண்ணப்படம் விடுமுறை மலருக்கே பெருமை சேர்க்கும் வண்ணம் அமைந்திருந்தது.

— ஆர். அரிகோபி, குடியாத்தம்.

* விடுமுறை மலரில் நியூயார்க்கின் விண்ணளாவும் கட்டிடங்களைப் புதுமையான கோணத்தில் வண்ணப்படமாக எடுத்தளித்தவர் எனது அமெரிக்க நண்பர் — புகைப்படக்கலைஞர் — கே. ராமகிருஷ்ணன். இவ்வளவு அற்புதமான விடுமுறை மலரில் அவர் பெயர் கே. ராமச்சந்திரன் என்று அச்சாகிவிட்டதே என்று எனக்குக் கொஞ்சம் வருத்தம்தான்.

— விசுவநாதன், சென்னை — 4.

* விடுமுறை மலர் 1986 கோடை வெயிலில் குளிர்பானம் குடித்தாற்போல் ஜில்லென்று இருந்தது. மூன்று ஆச்சாரியர்களின் முகப்புப் படங்களும் அருமை. அருவி, ஏரிகளின் வண்ணப்படங்களை விட்டுக் கண்களை அகற்றவே முடியவில்லை. மொத்தத்தில் இம்மலர் ஒரு மினி தீபாவளி மலர்.

— இந்திரா பத்மநாபன், ஸ்ரீரங்கம்.

* மத்திய சுற்றுலாத் துறை அமைச்சர் பகத் அவர்களின் பேட்டி அருமை. பக்கத்துக்குப் பக்கம் உ. ராஜாஜி, எஸ். ராமன், பெ. கலாசாமி இவர்களின் ஜோக்குகள் கலகலப்பூட்டின.

— எம். செல்லையா, சாத்தூர்.

# நீங்கள் புதிய பெஸ்டோ உபயோகித்திருக்கிறீர்களா?

இப்போது, முற்றிலும் புதிய ப்ளூ டிடர்ஜெண்ட் பவுடர்— கோத்ரெஜ் வழங்கும் புதிய பெஸ்டோ! சாதாரண வாஷிங் பவுடர்களிலிருந்து முற்றிலும் மாறுபட்டது. எப்படி என்று பாருங்கள்.

Godrej

**Besto**

Blue detergent powder

-बेस्टो-

ब्लू डिटर्जेंट पाउडर

Net Wt. 1 kg

கிலோ ஒன்றுக்கு விலை
**ரூ. 7.65**
உள்ளூர் வரிகள் தனி

1. அளவான நுரைவளம் கொண்ட பெஸ்டோவில் தீங்கு விளைவிக்கக் கூடிய வாஷிங் சோடா சிறிதும் இல்லை. ஆகையால்:

அ) பெஸ்டோவில், இதர வாஷிங் பவுடர்களை நீரில் கலக்கும்போது கைகளுக்கு ஏற்படும் வழுவழுப்பு கிடையாது.



ஆ) பெஸ்டோ, பருத்தி, கம்பளி, பட்டு மற்றும் சின்தெடிக் துணிகளை முழுமையாகப் பாதுகாக்கிறது.



இ) பெஸ்டோவில் துணிகளை அலசுவது மிகவும் எளிது.



ஈ) பெஸ்டோ கைகளை மிக மென்மையாகவும் மிருதுவாகவும் வைக்கிறது.



2. பெஸ்டோவில் மட்டுமே உள்ள விசேட உட்பொருளாகிய அல்ட்ரா ஒலபின ஒவ்வொரு துவைப்பிலும், வெள்ளைத் துணிகளுக்கு அதிக வெண்மையையும், வண்ணத்துணிகளுக்கு அதிக பளபளப்பையும் தருகிறது.



3. பெஸ்டோ, உங்கள் வாஷிங் மெஷினுக்கு மிகச் சிறந்தது.



பெஸ்டோ-உங்கள் துணிகள், கைகள் மற்றும் பணத்தின் நலம் விரும்புவது.

CHAITRA-B G 405 TAM

**மனங்கவர்ந்த விலையில் உளங்கவர்ந்த வெண்மை—கைகளுக்கு மென்மை.**

**கோத்ரெஜ்**
தயாரிப்பு

பற்பல பதிப்பகங்களின்
பக்திப் புத்தகங்களை

ஒருசேரக் காண
ஓர் அரியவாய்ப்பு

லிப்கோ நடத்தும்
தெய்வீகப்
புத்தகக் காட்சி

ஜூன் 4ம் முடிய எல்லா
நாட்களிலும்
தினசரி காலை
9 மணி முதல்
இரவு 8-30 வரை

லிப்கோ
ரங்கநாதன்
தெரு,
தி.நகர

10%
சிறப்புத்
தள்ளுபடி!

இன்றே விஜயம் செய்க

---

**ரூ 150 பெறுமான**
**லிப்கோ நூல்கள் இலவசம்!**

ரூ.1000/— ஐ எம்மிடம் முதலீடு செய்பவர்களுக்கு **ரூ. 150** பெறுமான அவர்கள் விரும்பும் லிப்கோ புத்தகங்கள் முற்றிலும் இலவசமாக உடனடியாக அனுப்பி வைக்கப்படும். 3 ஆண்டுகளுக்குப் பிறகு அந்த முதலீடு **ரூ. 1350** ஆகத் திருப்பப் படும். முழு விவரங்களுக்கு எழுதுக:

போன்:
441538



58—ஆம்
ஆண்டு

**தி லிட்டில் ப்ளவர் கம்பெனி**
43, ரங்கநாதன் தெரு, தபால் பெ 1028
தியாகராயநகர், சென்னை—600 017

---



பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி

மஹான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் 1542—ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து நடந்து வரும் கும்பகோணம் "ராஜா வேத காவ்ய பாடசாலை" யை மேற்படி ஸமிதியானது தாய் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 75 மாணாக்கர்கள் வேதாத்யாயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஒருநாள் உணவளிக்க சுமார் 200/— ஆகிறது. இந்த தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ. 2000/— மூலதனம் ஏற்படுத்தியோ (அ) அவ்வப்போது ரூ. 200/— அனுப்பியோ ஒரு குறிப்பிட்ட தினத்தில் சமாராதனை நடத்தும் கைங்கர்யத்தில் பங்கு கொள்ளக் கோருகிறோம். நன்கொடைக்கு 80—G விதியின்படி வருமானவரி விலக்கு உண்டு.

நன்கொடை அனுப்ப வேண்டிய பெயரும் முகவரியும்:

அத்வைத வித்யாசார்ய மஹாராஜ ஸாஹேப்
ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி,
D—76, 3 வது கிராஸ், ஸ்ரீநகர் காலனி, கும்பகோணம்—612 001.

# சென்னைப் பல்கலைக்கழகத்தின் உலகளாவிய சாதனை!

சென்ற ஆண்டு ஏப்ரல் திங்களில்
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு நடந்த தேர்
வுக்கு இந்த ஆண்டு ஏப்ரலில் தேர்வுச்
சான்று வந்து சேர்ந்துவிட்டது! இவ்வளவு
விரைவாகப் பட்டச் சான்றிதழை அனுப்பு
வது உலகிலேயே சென்னைப் பல்கலைக்
கழகம் ஒன்றினால்தான் முடியும்.

சான்றிதழைச் சட்டமிட்டு மாட்டி வைக்க
வும் தகுதியற்ற அழகற்ற எழுத்துக்கள். தற்
குறித்தனமான மொழிபெயர்ப்பு வேறு.
(Defence) 'டிஃபென்ஸ்' என்பது இராணுவ
வியல். போர்க்கலை என்றும் கூறலாம். தற்
காப்பு இயல் என்றேனும் மொழி பெயர்க்க
லாம். தற்காப்புப் படிப்பியலாம்! தமிழ்
வளர்க; வாழ்க!

சான்றிதழைப் படிக்கவே எரிச்சலாய்
வருகிறது. 'சென்னைப் பல்கலைக்கழகப்
பேரவை ஏப்ரல் மாதம் 1985 ஆம் ஆண்டு
**நடந்த** தேர்வில்' என்று அச்சாகியுள்ளது.
நடத்திய என்றுதான் இருக்க வேண்டும்.

சான்றிதழ் தயாரிக்க ஒன்பது மாதம்,
அனுப்பி வைக்கவோ மூன்று மாதம்.
10.1.86 ல் துணைவேந்தர் கையெழுத்திட்டு,
2.4.86 ல் உரியவருக்கு வந்து சேர்ந்துள்ளது.

சென்ற ஆண்டு இளைஞர் ஆண்டு என்று
கூறி விவேகானந்தரின் வாசகங்களுக்கு
வாசம் பூசினார்கள்: ''இளைஞனே! எழு!
விழி!'' இது சென்னைப் பல்கலைக்கழகத்துக்
கல்லவே. அது தொடர்ந்து படுத்து உறங்
கட்டும்!

— க. ந. விஸ்வகுமார், சென்னை — 83.

வீடு கட்டுவதற்காக சிமெண்ட் பர்மிட்
பெற மனுச் செய்திருந்தோம். கடந்த
25.4.86 அன்று குறிப்பிட்ட அலுவலகத்தி
லிருந்து 'பர்மிட் பெற்றுக் கொள்ளவும்'
என்று கடிதம் வந்தது. பர்மிட் பெறுவதற்
காக, நான் அங்கு சென்ற பொழுது எனக்கு
முன்னால் பர்மிட் வாங்கிய அனைவரும் அந்த
அலுவலரிடம் பணம் கொடுத்துவிட்டுத்
திரும்பினர். நான் ஒருவரை நிறுத்தி விசா
ரித்த பொழுது அவர், 'பர்மிட் நம் கையில்
கிடைக்க வேண்டுமென்றால் இருபது முதல்
முப்பது வரை பணம் வெட்ட வேண்டும்'
என்று கூறினார். என் முறை வந்ததும், அவர்
பர்மிட்டைப் பார்த்துவிட்டு, 'நாற்பது மூட்
டையா... இருபது கொடு!' என்று கூறினார்.
நான் பணம் கொடுப்பதற்குக் கடைசி வரை
யிலும் சம்மதிக்கவில்லை. இறுதியில், எங்கள்
இருவரின் போராட்டமும் நான்கு ரூபாய்
கொடுத்த பிறகே முடிவடைந்தது. இப்படி
சாதாரண விஷயமாக இருந்தாலும் லஞ்சம்
கொடுக்க வேண்டியிருக்கிறதே என்று நினைக்
கும்பொழுது மனசு வேதனைப்படுகிறது.
பர்மிட் லைசென்ஸ் முறை உள்ளவரை ஆட்சி
யாளருக்குக் கொண்டாட்டமும் மக்களுக்குத்
திண்டாட்டமும்தான்.

— மூர்த்தி, குளித்தலை.

பதினேழு கோடி ரூபாய் முதலீட்டுடன்
எம்பயர் நிறுவனத்தால் சென்னையில்
அமைக்கப்படவிருந்த பாட்டில்கள் தயாரிக்
கும் தொழிற்சாலை தமிழக அரசு தொடர்ச்சி
யான மின்சாரத்துக்கு உறுதி சொல்ல முடி
யாததால் இப்போது ஆந்திராவில் உள்ள
ரேணிகுண்டாவில் அமைக்கப்படுகிறது
என்பது ஏப்ரல் 20 ம் தேதி வந்த செய்தி.

இப்படி ஒன்றல்ல; ஒவ்வொன்றாகப் பல
தொழிலகங்கள் அண்டை மாநிலங்களுக்குப்
போய்க் கொண்டிருக்கின்றன. தமிழக அரசு
விழித்துக் கொள்ளாமல் வழக்கம் போல்
தொழில்வளம் தமிழகத்தில் பிரமாதமாகப்
பெருகி வருவதாகக் கூறிக் கொண்டிருக்
கிறது!

— பா. மணிவாசகம், காரைக்கால்.

தமிழகத்தில் சமீபத்தில் வெளியான ஒரு
திரைப்படத்துக்குச் சென்றபோது, ஆபத்தை
உணராமல் திரைக்கு மிக அருகில் கற்பூரம்
கொளுத்தினார்கள் ரசிகர் மன்ற இளைஞர்கள்.
அதையும் சிலர் தொட்டுக் கும்பிட்டனர்.
பால்கனியில் இருந்தவர்கள், அபிமான
நடிகர் தோன்றும் போதெல்லாம் கலர்
பேப்பர்கள், பூக்கள், சில்லறை காசுகள்
முதலியவற்றை வீசியதுடன் சந்தனத்தையும்
தெளித்துச் சட்டையை நாசப்படுத்தினார்கள்.
வசனமே கேட்காத அளவிற்குக் கூச்சல்
போட்டார்கள். 'உடல் மண்ணுக்கு, உயிர்
எங்கள் அபிமான நடிகருக்கு' என்று ரத்தத்
தால் எழுதப்பட்ட அட்டையைப் பெருமை
யுடன் பிடித்திருந்தார்கள். படம் சுமார்
என்று சொன்ன ஒருவருக்குக் கிடைத்தது
தர்ம அடி! இவற்றை எல்லாம் கண்டபோது,
''இது என்ன அநாகரிகம்?— நாம் 21 ஆம்
நூற்றாண்டை நோக்கித்தான் செல்கி
றோமா?'' என்று வேதனை உண்டாயிற்று.

ரசிகர் என்ற முறையில் ஒன்றுகூடும்
இவர்கள் தங்கள் செயல்திறனை பிற ஆக்கப்
பணிகளில் காட்ட முயன்றால் என்ன? உதா
ரணமாகக் கர்நாடகத்தில் ராஜ்குமாரின்
ரசிகர்கள் ஒரு மாவட்டத்தையே தத்து
எடுத்துக் கொண்டு முன்னேற்ற முயற்சிகளை
மேற்கொண்டிருக்கிறார்களே! பொதுச்
சேவையுடன் வறட்சி நிவாரணப் பணிக
ளிலும் பங்கேற்கிறார்களே!

— வி. ரமேஷ், பெங்களூர்.

தேர்வுகள் முடிந்தன. தேர்வுத் தாள்கள் திருத்தப்பட்டுக் கொண்டிருக்கின்றன. மாணவர்கள் தங்கள் முகவரிகளை உருவாக்கப் போகும் முடிவுகளை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

கிழித்துக் கிழித்துப் போட்ட பிறகும் முடிந்து போகாமல், புதிது புதிதாக முளைத்துக் கொண்டேயிருக்கும் தேதித் தாள் ஒவ்வொன்றும் என் கண்களுக்குத் தேர்வுத் தாளாகவே தெரிகிறது.

இந்தக் கவிதையில் வரும் கேள்வி எவர் எவரை நோக்கி எழுப்பப்படுகிறது? எவர் இந்தக் கேள்வியை எழுப்பிவிடுகிறார்கள்....?

இதைக் குளம் என்று எண்ணிக் கொண்டு நீங்கள் குளிக்கப் புறப்படுங்கள். கால் வைத்த பிறகு இது கடலாக மாறுவதைக் கண்டு கொள்ளலாம்.....!

# மு.மேத்தா

# கிழக்கெல்லாம் கேள்வித்தாள்...



என்னுடைய தேர்வுத்தாள்!
எவர் அங்கே திருத்துவது?
மகிழ்ச்சி அலைபரப்பும்
மனநிலையா? இல்லை
யென்றால்
கோபக் கனல் மனதில்
கொதிக்கின்ற சூழ்நிலையா?

•

என்னுடைய தேர்வுத்தாள்!
எவர் அங்கே திருத்துவது?
எழுத்து அழகாக
இருந்தால் மதிப்பீரா?
கருத்திருந்தால் போது
மென்று
கணிப்பீரா?
இல்லையெனில்.....
தாள்களினை நிறுத்துத்தான்
தருவீரா மதிப்பெண்கள்?

ஏதோ ஒரு பொழுதில்
எங்கோ ஓர் இடந்தனிலே
வெள்ளைத்தாள் மீது
விடை எழுதி வந்தவன்
நான்!

பகலும் இரவுமாய்ப்
பலகாலம் படித்ததனைக்
குறித்த பொழுதுக்குள்
குறைவின்றி எழுதிவைத்
தேன்!

நிறுத்திப் படிப்பதற்கு
நேரமுண்டா? விரைவாகத்
திருத்தி முடிப்பதிலே
தீவிரமா?

எழுதி நான் வைத்த
தெல்லாம்
என்னுடைய வழித்
தடங்கள்!

எழுத இருப்பதெல்லாம்
என்னுடையபுதுத்தடங்கள்!
இடையே நீர் போடுவீரோ
ஏதேனும் புதுத் தடங்கல்?
என்னுடைய தேர்வுத்தாள்!
எவரங்கே திருத்துவது?

•

முழுமையாய் வாசித்து
முடிவுக்கு வருவீரா...
மதிப்பெண்ணைக்
குத்து மதிப்பாகக்
கூட்டிக் கழிப்பீரா?

என்னுடைய எதிர்காலம்
என் பெற்றோர் நிகழ்காலம்
என்னுடைய பெண்டு
பிள்ளை
இவர் காலம் —
இவையெல்லாம் —
இப்போது
உம்முடைய கைகளிலே
ஊர்கோலம்!

அதற்காக —
சலுகைகள் நான் கேட்க
வில்லை!

தகுதி தரம் தெரிந்து
சரியான மதிப்பீடு
செய்க எனக் கேட்
கின்றேன்!

மதிப்பெண்கள்
கூட்டிப் போடும்படி
கோரிக்கை விடவில்லை....
நியாயமின்றிக்
குறைத்து விடுவதுதான்
கூடாது என்கின்றேன்!

என்னுடைய தேர்வுத்தாள்
எவரங்கே திருத்துவது?

கண்விழித்துக் கண்
விழித்துக்
காலமெலாம் நான்
உழைத்தேன்
என்னையே பிழிந்தன்றே
எழுத்துக்களாய் நான்
இழைத்தேன்!

உரிய மதிப்பெண்கள்
உழைப்புக்குவிழாவிட்டால்
அடித்தல் திருத்தலுக்கு
அவசியங்கள் உண்டாகும்!
மறுதிருத்தல் செய்வதற்கு
மாமன்றம் தீர்ப்பளிக்கும்!

என்னுடைய தேர்வுத்தாள்
எவரங்கே திருத்துவது?
திருத்திக் கொண்டிருப்
பவர்க்குத்
தெரிவித்துக் கொள்
கின்றேன்:

"உம்முடைய தேர்வுத்
தாள்
ஒருநாள் எம் கையில்
வரும்!"



## 5

(லஞ்ச் ரூமில் ரகுவீர், சுசிலா, பாண்டியன், சிவராமன், ஆனந்த் ஆகியவர்கள் தங்களது சாப்பாட்டு வகையறுக்களை ஒரு பிடி பிடித்துக் கொண்டும், அவ்வப்போது, 'பிரமாதம்! தூ! என்ன உறைப்பு! சகிக்கலே!' என்று உடனடி விமர்சனங்களை ஒலிபரப்பிய படியும் மும்முரமாக இருக்கும் வேளை. அப்போது ராகவாச்சாரியும் சாம்பசிவமும் திருக்கழுக்குன்றத்துக் , கழுகுகளைப் போல் ஜோடியாக நுழைந்து, காலியாக உள்ள இரண்டு இடங்களில் உட்காருகிறார்கள். ராகவாச்சாரியின் கண், ஏர் கண்டிஷண்ட்டு அறைக்குள் சிக்கிய பட்டாம்பூச்சி போலப் படபடக்கிறது. சுற்றிலுமிருப்பவர்களைத் திரும்பித் திரும்பிப் பார்க்கிறார்.)

ஆனந்த்: என்ன சார் தேடறீங்க?

ராகவா: அதுவா? ஒண்ணுமில்லே. என் கண்ணாடியைக் கொண்டு வர மறந்துட்டேன்.

ஆனந்த்: ஏன் சார் அநியாயத்துக்குப் புளுகறீங்க! உங்க நெத்திக்கு மேலே இருக்கே கண்ணாடி! மைதிலியைத் தேடறேன்னு உண்மையைச் சொல்லுங்களேன்!

ராகவா (அசடுவழிந்தபடி): ஹி... ஹி... ஆமாம்பா! மைதிலியை எங்கே காணோம்?

பாண்டியன்: அவங்க இனிமே லஞ்ச் ரூமுக்குள்ளே வரமாட்டாங்களாம்!

ராகவா (கலவரத்துடன்): ஏன்யா? என்ன ஆச்சு? நீங்க யாராவது மைதிலியோட மனசு புண்படும்படியா நடந்துக்கிட்டீங்களா என்ன?

சுசிலா: நாங்க ஒரு தப்பும் செய்யலே... ஆமாம், இன்னிக்குக் காலையிலே ஆபீஸ் டயத்துக்கு முன்னாலே இந்த ரூம்லே நீங்க என்ன செய்துக்கிட்டிருந்தீங்க? அதைச் சொல்லுங்க!

ராகவா: சத்தியமா வம்பு கிம்பு எதுவும் செய்யலேம்மா!

பாண்டி: கேளுங்க தோழர்களே! வம்பு எதுவும் செய்யல்லேன்னு சார் வருத்தப்படறார்!

சிவரா: அட! உண்மையைச் சொல்லித்..

# லஞ்ச் டைம்

தொலையுங்கப்பா.... அவர் முழிக்கிறதைப் பார்த்தா நல்லால்லே! கத்திரி வெயில் வேறே! தடால்னு மயக்கம் கியக்கம் போட்டு விழுந்துட்டார்னா நம்ம லஞ்ச் டைம் கோவிந்தா ஆயிடும்!

சுசீலா: நான் சொல்றேன் விஷயத்தை. ஜி. எம். சார்! காலையிலே நீங்க உங்க வீட்டிலேருந்து கொண்டு வந்திருந்த காஞ்சிபுரம் இட்லியை லஞ்ச் டைம் வரை காத்திருக்க மனசில்லாமல் ஆபீஸுக்கு வந்ததும் வராததுமா இந்த ரூம்லே ஒரு கை பார்த்தீங்களா, இல்லையா?

ராகவா: ஆமாம், அது ஒரு பெரிய குற்றமா?

சுசீலா: மைதிலி உங்க பக்கத்திலே வந்து நின்னு பார்த்துக்கிட்டே இருந்தாளாம். 'இந்தாடியம்மா'ன்னு ஒரு துண்டுகூட கொடுக்காம, நெருப்புக் கோழி மாதிரி லபக் லபக்னு மொத்தத்தையும் நீங்களே முழுங்கிட்டீங்களாம் — அதனாலேதான் மைதிலிக்கு உங்க மேலே கோபம்!

ராகவா: அட, ராமா! நான் காஞ்சிபுரம் கோவில் நகைகள் கோடிக்கணக்கிலே களவு போயிட்டதேங்கற கவலையிலேன்னா மூழ்கியிருந்தேன்! அதனாலேதான் மைதிலியைக் கவனிக்கல்லே.... கவனிச்சிருந்தேன்னா என் கையாலேயே அவளுக்குக் காஞ்சிபுரம் இட்லியை ஊட்டி விட்டிருப்பேனே!

சுசீலா: சூ. இப்படியெல்லாம் பேச உங்களுக்கு வெட்கமாயில்லே?

பாண்டி: அவர் காசிக்குப் போயிட்டு வந்தபோது வெட்கம், மானம், சூடு, சொரணை எல்லாத்தையும் விட்டுட்டு வந்துட்டாராம்.

ராகவா: டேய்! நீ எங்கிட்டே 'மெமோ' தான் வாங்கப் போறே!

சாம்ப: அவன் கிடக்கான் பொடி மட்டைப் பய! விடுங்க! ஆமாம், அதெப்படி சார் திருடங்க அத்தனை துணிச்சலா எல்லா நகைகளையும் சுருட்டியிருப்பாங்க! கோவில் ஆசாமிகளும் சம்பந்தப்பட்டிருப்பாங்களோன்னு போலீஸ்லே சந்தேகப்படறாங்களாமே?

ராகவா: சந்தேகம் வராமலிருந்தால் தான் நாம சந்தேகப்படணும். இப்ப எங்க பாரு. வேலியேதான் பயிரை மேயுது.... ஏர்ப்போர்ட்லே மூணு போலீஸ்காரங்க ஒருத்தரோட சங்கிலியைப் பறிச்சிக்கிட்டு ஓடினாங்க.... ஆனா மாட்டிக்கிட்டாங்கன்னு பேப்பர்லே போட்டிருந்தானே! சட்டம் போடற அரசியல்வாதிகள்தான் சட்டத்தை மீறுகிறாங்க. கஸ்டம்ஸ் அதிகாரி கடத்தல்லே ஈடுபடறார்.... எம்.ஏ. பரீட்சை எழுதற ஆசிரியர்கள் 'பிட்' அடிக்கிறாங்க. பாங்க் சேர்மனே லட்சம் லட்சமா ஃபிராடு பண்றார்.... நாடு எங்கே போய்க்கிட்டிருக்குன்னு தான் தெரியலே!

ஆனந்த்: இருபத்தோராம் நூற்றாண்டை நோக்கிப் பீடு நடை போடறோம் சார்! பெருமைப்படாமல் பெருமூச்சு விடறீங்களே!



சுசீலா: இதெல்லாம் கிடக்கட்டும். ஜி.எம். சார்! வயசிலேயும் அந்தஸ்திலேயும் பெரியவர்னு சொல்லி மரியாதையைக் கட்டாய வசூல் பண்றீங்களே! மிஸ்டர் சாம்பசிவம் அன்னிக்குச் செஞ்ச மிஸ்சிஃப் பத்திக் கேள்விப்பட்டீங்க இல்லையா? அதைக் கண்டிச்சு ஒரு வார்த்தையாவது சொன்னீங்களா?

ராகவா: ஜி. எம்.ங்கிற முறையிலா, இல்லே நண்பர்ங்கற முறையிலா?

பாண்டி: சார்! இந்த ஜி. எம். பந்தாவெல்லாம் லஞ்ச் ரூம்லே காட்டாதீங்கன்னு நிறைய வாட்டி சொல்லிட்டேன்!

ர்ாகவா: சரி! சரி! சரி! நண்பர்ங்கிற முறையிலேயே கேட்கிறேன். ஏன்யா சாம்பசிவம்! நீர் செய்தது சரிதானா? இந்த லஞ்ச் சபைக்குப்பதில்சொல்லாமல்உம்மகையிலே இருக்கிற வெங்காய அடை விள்ளலே வாயிலே போட்டுக் கொள்ளக்கூடாது. ஆமாம்! சொல்லிட்டேன்!

சாம்ப: சார்! என் விளக்கத்தைக் கொஞ்சம் பொறுமையா கேளுங்க. ரிப்பன் பிரபு ரிப்பன் போல நீளமா தாடி வச்சிருந்ததாலே அவருக்கு அந்தப் பேர் வந்தது; ஆப்கானிஸ்தான் பலூசிஸ்தான் எல்லாம் தமிழ்நாட்டிலேதான் இருக்கு. மஹாத்மா காந்தியைக் கொலே செய்தவர் குருஷ்சேவ்; அமெரிக்க ஜனாதிபதி கோஸிஜின்; காக்காதான் நமது தேசிய பறவை — இப்படியெல்லாம் பி.ஏ. படிச்ச மாணவர்கள் தமிழ்நாடு பப்ளிக் சர்வீஸ் கமிஷன் பரீட்சையிலே எழுதியிருக்காங்களாம். தாங்க எழுதற ஆன்ஸர் தப்புன்னு தெரிஞ்சிருந்தா இப்படி செய்திருப்பாங்களா....?

ராகவா: பாயிண்டுக்கு வாரும் ஐயா சீக்கிரம்!

சாம்ப: அதே போலத்தான் ரகுவீருக்குப் பெண் கொடுக்கறேன்னு வந்தவர் கிட்டே சும்மாவானும் ரீல் விட்டேன்.... ரகுவீர் — சுசிலா காதலேக் கரை சேர்க்கணும் கிற நல்ல நோக்கத்திலேதான் அப்படிச் செய்தேன். அது மிஸ்ஃபயர் ஆகும்னு நான் நினேச்சுக் கூடப் பார்க்கல்லே சார்! நான் என்ன கொலேயா பண்ணிட்டேன் — இப்படி எல்லாருமா சேர்ந்து என்னேத் துளேக்கறீங்களே!

ஆனந்த்: தஞ்சாவூர்லே ஒரு பையனுக்குக் கால்லே கட்டின்னு ஆபரேஷன் செய்ய, சர்க்கார் ஆஸ்பத்திரியிலே சேர்த்திருந்தாங்களாம். ஒரு மேதாவி டாக்டர் அந்தப் பையனுக்குச் சிறுநீரகப் பாதையிலே ஆபரேஷன் செய்தாராம். அதோடு விட்டால் பரவாயில்லேயே! 'நான் என்ன கொலேயா செஞ்சுட்டேன்'ன்னு முறைச்சாராம்! அதைப் போலத்தான் இருக்கு உங்க பேச்சும்!

பாண்டி: நீங்க செஞ்சிருக்கிறதும் ஒரு கொலேதான்! கேரக்டர் அஸாஸினேஷன்!

ஆனந்த்: அதனுடை விளேவு எப்படி விபரீதமா போயிடுச்சு பாருங்க! அதுக்கு நீங்க பொறுப்பு ஏத்துக்குவீங்களா?

சிவரா: ஏம்பா ஆளுக்கு ஆளு அவரைப் போட்டுச் சதாய்க்கறீங்க! சாம்பசிவம் சார்! நீங்க டிபனேச் சாப்பிடுங்க!

(சாம்பசிவம் லபக்கென்று அடைத் துண்டை விழுங்குகிறார்.)

ஆனந்த்: அது சரி சுசீலா....! அன்னிக்கு ரகுவீருக்கு என்ன ஆகப் போறதோ, ஏது ஆகுமோன்னு பதறினீங்களே.... அப்புறம் என்ன ஆச்சுன்னு நீயோ ரகுவீரோ எதுவுமே சொல்லலியே!

சுசீ: அன்னிக்கு எம்.டி. ரூம்லே என்ன நடந்ததுன்னு அவர் என்கிட்டே கூடச் சொல்லலே சார்.

(ரகுவீர் நமட்டுச் சிரிப்பு சிரித்தபடி உட்கார்ந்திருக்கிறான்.)

பாண்டி: என்னய்யா ர்குவீர், வாயிலே என்ன கொழுக்கட்டையா?

ரகுவீர்: இல்லே இடியாப்பம்! இரு. முழுங்கிட்டு வந்து முழு விவரமும் சொல்றேன்!

பாண்டி: விடிஞ்சிது போ! நீ இடியாப்பத்தை விழுங்கறதுக்குள்ள கோடை முடிஞ்சு பருவ மழையே வந்துடும்!

சுசீலா (வெட்கத்துடன்): பருவம் எப்பவோ வந்தாச்சு. கல்யாண மழையைத்தான் காணும். காதல் தூறலோடு நின்னு போயிடக்கூடாதேன்னு கவலேயா இருக்கு.

ரகுவீர்: இடியாப்பத்தை முழுங்கிட்டேன். இப்ப சொல்லிடறேன்..... எம்.டி. என்கிட்டே 'என்னப்பா, ஆபீஸ் பணத்தைக் கையாடி கஞ்சா அடிக்கிறயாம்.... குடிக்கிறியாம்.... கண்ட பெண்களோடு கொட்டமடிக்கிறயாமே?' ன்னு கேட்டார். 'அதுக்கு இப்ப என்னங்கறீங்க'ன்னு முறைப்பாவே கேட்டேன்!

சுசீலா: ஐயய்யோ! நீங்களே உங்க தலேயிலே மண்ணே அள்ளிப் போட்டுக்கிட்டீங்களே?

ஆனந்த்: நீ ஏம்மா பயப்படறே! ரகுவீர் சிரிச்சுக்கிட்டே சொல்றனே — அதிலிருந்தே ஆபத்து எதுவுமில்லேன்னு புரிஞ்சுக்க வேண்டாமா?

ரகுவீர்: எம்.டி. என்ன செய்தார் தெரியுமா? தன் ஸீட்லேருந்து எழுந்து சுபால்னு என் கையைப் பிடிச்சுக்கிட்டார்.

பாண்டி: நீ எங்கேயாவது ஓடிப் போய்டுவியோன்னு பயம் வந்திருக்கும்!

ரகுவீர்: முழுக்கக் கேளுய்யா....! எம்.டி. யோட கண்கள் குளமாகிவிட்டன. அதிலிருந்து கண்ணீர் வாய்க்கால்கள் ரெண்டு புறப்பட்டு அவருடைய கன்னமாகிற கட்டாந்தரையிலே வேகமாகப் பாய....

ஆனந்த்: அதுக்கு அணே கட்டறதுக்கு டெண்டர் விட நீ ஆளேத் தேடினியாக்கும்!

ரகுவீர்: எம்.டி. குரல் தழுதழுக்கச் சொன்னார்: ''ரகு! உன் கையிலேதாம்மா என் மானம், மரியாதை எல்லாம் வசமா சிக்கியிருக்கு. நீதான் காப்பாத்தணும்'' னார். எனக்கு ஒரு மண்ணும் புரியல்லே.... ''என்ன சார் சொல்றீங்க'' ன்னேன். ''என் நேரடி மேற்பார்வையிலேநீவேலை பார்க்கும்போதே இப்படித் தில்லுமுல்லு நடந்திருக்கும்னா, அதனாலே எனக்குத்தானே கெட்ட பேரு? எனக்கு ஸ்டாஃப் மேலே கண்ட்ரோல் இல்லேன்னு தெரிஞ்சு போயிடுமே! ஹெட் ஆபீஸ்லே என் ரேங்க்லே இன்னொரு எம்.டி. இருக்கார். அவரோட நிர்வாகத்துலே லஞ்ச் ஊழல் நடந்ததுன்னு நான் சந்தோஷப்பட்டேனே! இப்ப என் பேரும் சந்தி சிரிக்குமே!'' ன்னு சொல்லி ரொம்பக் கவலைப்பட்டுப் போனார்.

சுசீலா: அட, இது எதிர்பாராத திருப்பமா இருக்கே! காஞ்சிபுரம் கோயில் நகைகள் களவு போனதைப் பத்திக் கவலைப் பட்டுக்கிட்டிருக்கிறபோதுசிவபுரம்நடராஜர் சிலையும் திருவேள்விக்குடி விக்ரகமும் திரும்பக் கிடைச்ச மாதிரியான திருப்பம்னா இது!

(சாப்பாட்டுக் 'கூடைக்காரி நிர்மலா உள்ளே வருகிறாள்.)

நிர்மலா: என்ன சாருங்களா! இன்னுமா துண்றீங்க? இப்ப டயம் என்ன தெரியுமா? ரெண்டு மணி மூணு நிமிசம், முப்பத்தேழு செகண்டு! லஞ்ச் அவுரு முடிஞ்சுட்டுதுங்கற நெனைப்பே இல்லியாங் காட்டியும்? (நிர்மலா இடது கையை உயர்த்திக் காட்டவும் அதில் பளிச்சிடும் எலெக்ட்ரானிக் வாட்சைக் கண்டு பிரமிக்கிறார்கள்)

பாண்டி: நிர்மலா! ஏது உன் கையிலே வாட்ச் டால் அடிக்குதே புச்சா?

நிர்மலா: புச்சுதான்! இது என் மாமன் எனக்குக் கொடுத்த பரிசு!

ஆனந்த்: மாமனா? யாரு நம்மமாடசாமி தானே?

நிர்மலா: சீ! இது சிந்தாதிரிப்பேட்டை ஆளு.... நான் சொல்றது சிங்கப்பூர் மாமன் சிங்காரத்தை! இப்போ பரிசு கொடுத்திருக்காரு. அப்பாலே பரிசம் போடுவாரு!

பாண்டி: அப்பமன்னா மாடசாமியோட கதி?

நிர்மலா: சிங்கப்பூருக்குக் 'கை' கொடுப்போம்! சிந்தாதிரிப்பேட்டைக்கு 'நை' சொல்லுவோம்!

சுசீலா: வேடிக்கையாதான் இருக்கு போ! ராஜ்ய சபா நியமனத்துக்காக நம்மூர் ஆசாமிங்க யாராரோ முயற்சி பண்ண, எதிர்பார்க்காதவிதமா ஆர். கே. நாராயணனுக்கு சான்ஸ் கிடைச்சது போலன்னா இருக்கு! இன்னொருதிடீர்திருப்பமா? தொடர் கதை கூடத் தாங்காதே!

நிர்மலா: கதை ஒருவேளை தாங்காமப் போகலாம்; ஆனா திருப்பங்கள் உள்ளது தான் வாழ்க்கை! போகப் போக நீயே புரிஞ்சுக்குவ பாரு!

(திரை)

(தொடரும்)

## அடுத்த இதழ்...



கன்னியாகுமரி மாவட்டத்தில் கல்வி!

* கைவிடப்பட்ட கன்னியாகுமரி — டூரிஸ்டுகள் தவிக்கிறார்கள்

* விதியில் வசிக்கும் விடுதி மாணவர்கள்

* ''எங்களுக்கு ஒரு வழி சொல்லிட்டுப் போங்கய்யா...!'' — நடக்கக்கூடப் பாதையில்லாத மக்களின் சோகம்.

* இந்தச் சமுத்திரக் கன்னிக்குக் கல்யாணம் எப்போது? — ஓர் இயற்கைத் துறைமுகத்தின் அவலக் கதை!



பூரிக் கிழங்கு இன்று ஏகப் பிரமாதம்.

ஒரு விள்ளலைப் பிட்டு மசாலாவில் தோய்க்கும்போதே கோமதிக்கு ராமுவின் ஞாபகம் வந்துவிட்டது.

அவன், ஒரு பூரிப் பிரியன். ஐந்தாறு 'செட்'டானாலும் அலுப்போ, சலிப்போ இன்றி அரைத்துக் கொண்டே இருப்பான்.

பெரும்பாலும் ராமுவின் வீட்டில் உப்புமா கிளறும்போதெல்லாம் கோமதியின் வீட்டில் பூரி பொரிப்பார்கள்.

''பூரிதானே மாமி'' என்று மோப்பம் பிடித்துக் கொண்டே வந்துவிடுவான் ராமு.

''இல்லையே'' என்று சும்மனாச்சும் போக்கு காட்டினால் —

''பொய் சொல்லாதீங்கோ. மசாலா வாசனை மூக்கைத் துளைக்கிறதே'' என்று மூக்கைத் 'தம்' பிடிப்பான்.

பிளஸ் ஒன் படிப்பிலிருந்தே அவனுக்கு இந்தப் பழக்கம். இப்போது பி. இ. மூன்றாம் வருஷம் படிக்கிறான். ஆனால், பார்த்தால் அப்படித் தோன்றாது.

அப்பழுக்கற்ற பள்ளித் தோரணை இன்னும் அவன் முகத்தில் அச்சாக ஒட்டி இருந்தது. அந்த இயல்பும், விகற்பம் நினையாத உரிமையும், 'மாமி.... மாமி' என்று பிள்ளையைப் போல் இழைவதும், ஆனந்த பாஷ்யமாவாள் கோமதி.

ஆனால் —

இன்று இவ்வளவு நேரமாகியும் ராமு, ஏனோ வரவில்லை.

''ரேவதி அந்தப் பிள்ளையாண்டானைக் காணோமே''

''யாரு ராமுவா?''

''ஆமாம்.''

''ஜலதோஷ மூக்கோ, என்னவோ, சளி அடைச்சுட்டிருந்தால் வாசனை எட்டாதில்லையா.... அதான் வரல்லே.'' கிண்கிணிக் குரலில் கிண்டலாய்ச் சிரித்தாள், மகள்.

''சேச்சே, அதெல்லாம் இருக்காது. பரீட்சை சமயம். படிச்சுட்டிருப்பான். ஒரு சின்னக் காரியம் பண்ணேன்.''

''என்ன?''

''இரண்டு செட் பூரி தர்றேன். கொண்டு போய்க் கொடுத்துட்டு வர்றியா?''

''கொண்டு போய்க் கொடுப்பதா...?'' கெண்டை விழிகள் குண்டு போல் விரியத் தயங்கினாள் ரேவதி.

''அதென்ன, அப்படிக் கேட்கிறாய். போஜன புண்ணியம் கிடைக்கக் கொடுத்து வைத்திருக்கணும்டி. அந்தப் பிள்ளை சாப்பிடாமல் எனக்குச் செல்லமாட்டேன்கிறது.''

அம்மா கெஞ்சினாள்.

மறுக்கத் தோன்றவில்லை ரேவதிக்கு. படித்துக் கொண்டிருந்த நோட்ஸை மூடி வைத்துவிட்டு எழுந்தாள்.

''ம்.... கொடு.''

இரண்டு வீடு தள்ளி ராமுவின் வீடு.

சின்னதாய் அடி எடுத்து வைத்து, நடு வாசலில் நின்ற ஸ்கூட்டர் கைப்பிடியில் முந்தானை சிக்காமல் மெள்ள ஒதுங்கி, 'சார்' எனக் கூப்பிட வாய் திறந்தாள் ரேவதி.

கூப்பிடவில்லை.

உள்ளே —

''ராமு இன்று ஸ்பெஷல் கிளாசுக்கு காலம்பற ஆறு மணிக்கே போனது ஒரு வகையில் நல்லதாப் போச்சு. இல்லேன்னா இந்நேரம் அவங்க வீட்டுக்குப் போயிருப்பான், பூரி சாப்பிட'' என்றார், ராமுவின் அப்பா, அலட்சியமாக.

''ஆமாம். என்ன இருந்தாலும் இந்தக் கோமதியம்மாவுக்கு இப்படி ஒரு ஈனப் புத்தி கூடாது. வீட்டுக்காரர் போய்ச் சேர்ந்துட்டார். பையனுக்கும் சொற்ப சம்பளம். எங்காவது இண்டு இடுக்கு கிடைத்தால் பொண்ணைத் தள்ளிவிடலாமென்னு அலைகிறாள்'' என்று அருவருப்புடன் பேசினாள் ராமுவின் அம்மா.

''நானும் பார்க்கிறேன். பூரி மசால் கொடுத்தே நம் பையனை முந்தானை முடிச்சு போட்டுவிடுவாங்க போலிருக்கே.''

''போலிருக்கே என்ன.... அவர்களின் திட்டமே அதுதானே. நா ருசிக்காக வருகிறவன், 'அந்த' ருசிக்காக ரேவதிகிட்டே மயங்க மாட்டானா என்கிற ஆதங்கம், அந்தக் கோமதிக்கு. இன்ஜினியர் மாப்பிள்ளையாச்சே.... அவர்கள் வைக்கிற தூண்டிலிலே ராமு விழுந்துட்டால் பைசா செலவில்லாமல் பெண்ணைக் கரை ஏற்றிடலாமே.''

''இனி ராமுவைக் கண்டித்து வைக்கணும். அவர்கள் வீட்டுக்குப் போகாதேன்னு.''

''அதைச் செய்யுங்கள், முதலில்.''

உடல் முழுக்கப் பூரான் இழைவதுபோல் குறுகுறுத்தது ரேவதியின் தேகம். காதிரண்டையும் பொத்தியவளாய் வந்த சுவடு தெரியாமல் தெருவுக்கு வந்தாள், அவள்.

பூரியை என்ன செய்வது?

திரும்பக் கொண்டு போனால் அம்மாவுக்குப் பதில் சொல்லியாக வேண்டும். ஏமாற்றத்தில் மனசு ஒடிந்து போகாதோ, அவளுக்கு.

நல்லவேளை.

வழியில் ஒரு யாசகர்.

அவரது ஏனத்தில் பூரியைக் கொட்டிவிட்டு வீட்டுக்குள் நுழைந்தாள், ரேவதி.

''இருந்தானா, ராமு?''

திருவிழாவுக்குப் புறப்படும் சிறுமி மாதிரி, அம்மாவுக்குத்தான் எத்தனை ஆர்வம்?

''ஓ!''

''எனக்கு ரொம்ப தாங்க்ஸ் சொல்லி இருப்பானே!''

''ஆமாம், ரொம்பச் சொன்னார்.''

பால் பேரிங்ஸ் போல் தொண்டையில் சிக்கிய தயக்கத்தைச் சாமர்த்தியமாய் மறைத்து அம்மாவைச் சரிக்கட்டினாள், ரேவதி.

அன்று மாலை.

மினிடிராஃப்டர் சகிதம் காலேஜ் பஸ்ஸை விட்டு இறங்கினான், ராமு.

## ராஜ உடை; கிராமக் கலை



"பொய்க்கால் குதிரை என்ற கலை ஆரம்பமானதும் வளர்ந்ததும் பூனாவில்தான்" என்கிறார் 25 வருடங்களாக மனைவி யசோதாவுடன் சேர்ந்து இக்கலையைப் பயின்று வரும் கே. டி. பெருமாள். "அங்கு நடந்த ஒரு கலவரம் காரணமாகக் கொந்தளக்காரர்கள் என்னும் மேளம் வாசிப்பவர்கள் குடிபெயர்ந்து தஞ்சாவூர் வந்து தங்கினார்கள். இன்று தஞ்சை முள்ளுக்காரத் தெருவில் மேளக்காரரையும் சேர்த்து இக்கலை பயிலும் குடும்பங்கள் நூறுக்குமேல் உள்ளன. அந்தக் காலத்தில் இதற்குக் கொந்தள மேளம் என்றே பெயர். அப்போது, ஆண்களே பெண்கள் வேடமும் போட்டு ஆடிவந்தனர். பிறகு தமிழ்நாட்டு சம்பிரதாயப்படி நையாண்டி மேளம் அமைத்து, பொய்க்கால் குதிரை ஆட்டம் பழகினார்கள். பெண்களும் ஆட ஆரம்பித்தனர்.

"முக அலங்காரம் முதலில். பிறகு காலில் அரை அடி உயரமுள்ள கட்டையை நாடாவால் கட்டிக்கொள்கிறார்கள். பின்னர் பொய்க்கால் குதிரை என்ற நடுப் பகுதியை நாடாவால் தோளில் இணைத்து மாட்டிக்கொள்கிறார்கள். ராஜ உடை எனப்படும் அலங்கார உடையை அணிந்து கொள்கிறார்கள். இந்த உடைகளை இவர்களே தயாரிக்கிறார்கள்."

தகவல் சேகரித்தவர்: சித்தார்த்.

மூன்றாவது அட்டையில் பொய்க்கால் குதிரைக் கலையில் புகழ்பெற்ற
பெங்களூர் சுந்தரமூர்த்தி.

வண்ணப்படம்: யோகா.

ரேவதியைக் கண்டதும், "என்ன இந்த நேரத்திலே, டவுனுக்குப் போகிறாயா?" என்றான்.

"இல்லை. உன்னைப் பார்க்கத்தான் வந்தேன்."

"என்னையா?"

"ஆமாம். கொஞ்சம் இப்படி வா."

சந்தடி குறைந்த சாலை ஓரத்தில் —

"உன்னிடம் ஒன்று கேட்பேன். கோபிக்காமல் பதில் சொல்லணும்" நிபந்தனையில் ரேவதியின் செவ்வதரங்கள் சிலிர்த்தன.

"ஓ. எஸ்." உற்சாகமாகத் தலையசைத்தான்.

"நீ எங்கள் வீட்டுக்கு அடிக்கடி வருகிறாயே, அது ஏன்?"

"பூரி சாப்பிட." உதட்டோரங்களில் சின்னதாய்ச் சிரித்தான்.

"நிச்சயமா, பூரி சாப்பிடத்தானே?"

"சத்தியமா பூரி சாப்பிடத்தான்."

"வேறு எந்த நோக்கமும் இல்லையே."

"இல்லை."

"எங்களுக்கும் வேறு எந்த நோக்கமும் இல்லை..." குரல் உடைந்து, ரேவதியின் கண்கள் ஈரமாயின.

"ரேவதி, என்ன இது... எதுக்கு இப்ப அழுறே...?"

"என்னை... எங்களை உன் அப்பா காயப்படுத்திட்டார், ராமு."

"புரியும்படி சொல்லு, ரேவதி."

சொன்னாள்.

"அப்படியா...?" அதிர்ந்தான் ராமு. "கொஞ்சம்கூட மரியாதை இல்லாமல் அதென்ன பேச்சு?"

"போகட்டும் ராமு." கண்களைத் துடைத்துக் கொண்டு நிமிர்ந்தாள், ரேவதி. "உன் வீட்டிலோ... வேறு யாரிடமோ இதைப் பற்றி எதுவும் பேசாதே. அப்புறம், இன்னொரு ரிக்வெஸ்ட்..."

"என்ன?"

"இனி நீ எங்கள் வீட்டுக்கு வராதே."

"ரேவதி..."

"பதறாமல் கேள், ராமு. நீ திறந்த மனசோடுதான் வருகிறாய். நாங்களும் வித்தியாசம் பாராட்டாமல்தான் உன்னை உபசரிக்கிறோம். பரஸ்பரம் உனக்கும் எங்களுக்கும் கிடைக்கும் இந்த ஆத்மத் திருப்தியை வெளியில் உள்ளவர்கள் வேறுவிதமாய்ப் பார்க்கிறார்கள்."

"இஸிட்?"

"எதுக்கு இப்படி ஆச்சரியப்படுகிறாய்? இதுதான் உலகம். இதை நீ புரிந்து கொள்ளணும். அப்படி நீ வராதிருந்தால்தான் உனக்கும் நல்லது. எங்களுக்கும் மரியாதை."

தடைச் சட்டம் கடுமையாக இருந்தாலும், ரேவதியின் பேச்சு நியாயத்தை உணர்த்த, "ஆகட்டும், ரேவதி... ஆகட்டும்" என்று பொம்மையைப் போல் தலையசைத்தான், ராமு.

இரண்டு நாள் கழிந்திருக்கும்.

கோயிலுக்குப் போய்க் கொண்டிருந்தாள், ரேவதி.

யாரோ அடிக்குரலில் கூப்பிட்டார்கள்.

# செய்தி வாசிப்பவரின் கண் இமைகள் துல்லியமாக தெரிந்தால்



# அது சாலிடேராகத்தான் இருக்க வேண்டும்

ஒரு டிவி-யின் படத்தெளிவு, செய்தி ஒளிபரப்பாகும் போது நன்கு மதிப்பிடப்படுகின்றது. ஏனெனில், அது நேரடி அஞ்சல். தவிர, செய்தி வாசிப்பவர், சரியான விளக்கொளியில், ஒரே இடத்தில் நிலையாக உள்ள டிவி காமிராவின்முன் வாசிக்கிறார். ஆகையால், ஃபோகஸ் தவறாக இருப்பதற்கே வாய்ப்பில்லை.

இப்போது இதே காட்சியை பல்வேறு டிவிக்களிலும் பாருங்கள். பின்னர் அதை சாலிடேரில் உள்ள படத் தெளிவுடன் ஒப்பிட்டுப் பாருங்கள். சாலிடேர் டிவி-யில் செய்தி வாசிப்பவரின் கண்ணிமைகள் போன்ற நுணுக்கமான ஒவ்வொரு விவரமும் தெள்ளத் தெளிவாகத் தெரியும்.

சாலிடேரில் கிடைக்கும் இத்தகைய படத்தெளிவு, கூர்மை, மற்றும் கூடுதலான பளபளப்புக்குக் காரணம்: 'விஷன் இண்டர்மீடியேட் ஃப்ரீக்வன்ஸியில் (VIF) செய்யப் பட்டுள்ள மாபெரும் சாதனை.

ஆனால் அது மட்டுமே சாலிடேரின் தொழில்நுட்ப சிறப்புக்குக் காரணமல்ல. படம் உருளாமலிருக்க இதிலுள்ள ஆட்டோமாடிக் நாய்ஸ் கான்ஸலேஷன் சர்க்யூட் உதவுகிறது. ஒவ்வொரு சாலிடேர் டிவியும் வெப்பமண்டல நிலைக்கேற்ப தயாரிக்கப்பட்டிருப்பதால், மழைக்காலத்தில் பாதுகாப்பு பெறுகின்றது. இவை தவிர, சாலிடேர், மற்ற விஷயங்களையும், அதாவது ஆடியோ அவுட்புட், VCR கனெக்ஷன், டேப்-இன் அண்ட் அவுட் கனெக்ஷன்கள் ஆகியவற்றையும் கூர்ந்து கவனிப்பதால், உங்கள் டிவியில் அதிகபட்ச வசதிகளைப் பெறுகிறீர்கள்.

எல்லாவற்றுக்கும் மேலாக, சாலிடேரின் விற்பனைக்குப் பிந்திய இணையற்ற சேவை, உங்களுக்கு, எங்கு, எப்போது தேவைப்பட்டாலும் உடனடியாக செய்யப்படும் உன்னத சேவை.




TS 32E



PET 14

Portable with Electronic Tuner

**சாலிடேர்**

-தொல்லையில்லாத் தொலைக்காட்சி

மாடல் அன்பாதரவு:
கீதாஞ்சலி அய்யர், டெல்லி தூர்தர்ஷன்,
செய்தி வாசிப்பவர்.

பார்த்தாள்.

ராமு.

"என்ன, ராமு...?"

"ஒரு முக்கியமான விஷயம். அன்றைக்கு நான் உங்கள் வீட்டுக்கு வருவது பூரி சாப்பிடத்தான்னு சொன்னேன், இல்லையா?"

"ஆமாம்."

"அப்படித்தான் நினைத்தேன். ஆனால் அது தப்பு... நீ என்னை உன் வீட்டுக்கு வரக் கூடாது என்றதும் அன்று ராத்திரியும், மறு நாளும்எனக்குத்தூக்கமேவரவில்லை,ரேவதி. பூரி சாப்பிட முடியாத ஏக்கமாக மட்டும் இருந்தால் அவ்வளவு பெரிய பாதிப்பு எனக்கு ஏற்பட்டிருக்காது. ஆனால் அந்தப் பாதிப்புக்குக் காரணம் உன்னைப் பார்க்க முடியாதே என்ற வருத்தம்தான்... அதுதான் நிஜமான காரணம்...

"ராமு..."

"ஆமாம், ரேவதி. உன் வீட்டுக்கு வரா விட்டால் உன்னைப் பார்க்க முடியாது என்பதுதான் என்னை நோகடித்த உண்மை. அந்த உண்மை எனக்கு இப்போதுதான் புரிகிறது, ரேவதி."

ரேவதி, அவனைத் தீட்சண்யமாகப் பார்த்தாள்.

"ரேவதி... இன்னொன்று சொல்லட்டுமா?"

"சொல்லு."

"ஐ லவ் யூ ரேவதி."

"ராமு." அவளது இமைகள் படபடத்தன.

"என் படிப்பு சத்தியமா நான் உன்னைக் காதலிக்கிறேன், ரேவதி."

"நிஜமாகவா?" அதிர்ச்சியும், ஆர்வமும்.

"சாமி மீது ஆணையாக நான் உன்னை நேசிக்கிறேன், ரேவதி." அதற்குமேல் உறுதி சொல்லச் சாட்சியங்கள் இல்லாததால் நிறுத்திக் கொண்டான், ராமு.

நயன விழிகள் சந்தோஷ வீணையாகத் தலைகுனிந்தாள் ரேவதி, நிஜம் தெரிந்த போது...

"ஏன் ரேவதி ஒரு மாதிரி ஆயிட்டே. நான் பேசினது உனக்குப் பிடிக்கலையா?"

"நோ." ஆணித்தரமாக மறுத்தாள், அவள். "இப்போதுதான் என் வாழ்க்கைக்கு ஒரு அர்த்தம் கிடைத்த மாதிரி சந்தோஷமாய் இருக்கு, ராமு."

"நிஜமாகவா?" இப்போது அவன் ஆச்சரியப்பட்டான்.

"நானும் உன்னை எங்கள் வீட்டுக்கு வர வேண்டாம் என்று சொன்ன பிறகுதான்... என்னை என்னால் அடையாளம் காண முடிஞ்சது. நான்கூட எனக்குத் தெரியாமலேயே உன்னை நேசித்திருக்கிறேன், ராமு."

"பார்த்தாயா, நம் ஒற்றுமையை."

"பிரயோஜனம் இல்லை, ராமு." உதட்டைப் பிதுக்கினாள், ரேவதி.

"நீ என்ன சொல்கிறாய், ரேவதி?" திடுக்கிட்டான், ராமு.

"நாம் ஒருத்தரை ஒருத்தர் நேசித்தோம் என்ற நிம்மதியோடு நாம் பிரிந்தாக வேண்டும், ராமு."

"ரேவதி... என்ன இது...? நீயே ஊதிக் கொடுத்த அழகான பலூனை நீயே ஊசியால் உடைக்கிறாயே..."

"ஆமாம், ராமு. மனசிலே எந்த ஒரு களங்கமும் இல்லாமல் பெற்ற பிள்ளைக்குச் சாதம் ஊட்டி அழகு பார்க்கிற மாதிரி உனக்குப் பூரி பொரிச்சுக் கொடுத்துட்டு அதிலே ஒரு பரவசத்தை அனுபவிச்சாங்க, என் அம்மா. ஆனால், உன் அப்பா அதைத் தப்பா எடை போட்டு விட்டார்..." மிடறு விழுங்கிக் கொண்டாள், அவள். "நாம் எந்த அடிப்படையில் காதலித்திருந்தாலும் உன் அப்பாவும், மற்றவர்களும் கோதையம்மாள் பூரி கொடுத்தே உன்னை மயக்கி விட்டதாகத்தான் ஏளனம் பேசுவார்கள். அந்த அவப்பெயர் என் அம்மாவின் பவித்திரமான அன்பைப் பாவப்படுத்திடும், ராமு. அந்த அவமானத்தைச் சுமந்துண்டு காலம் முழுவதும் நாங்கள் கண்ணீர் விட வேண்டி வரும். அதை ஒரு போதும் நான் அனுமதிக்க மாட்டேன், ராமு. அனுமதிக்கவே மாட்டேன்..." உணர்ச்சிகளை மறந்து முகம் ஒரு கடினப் பாறையாக உறுதியாகப் பேசினாள், ரேவதி.

பிரமித்துப் போன ராமு, நிமிஷப் பொழுதுக்குப் பிறகு, மெள்ள வாய் திறந்தான்.

"ஸோ...

"அன்றைக்கு நாம் யார் என்பதைப் புரிஞ்சுக்காமல் பிறந்தோம். இன்றைக்கு ஒருத்தரை ஒருத்தர் நன்றாய்ப் புரிஞ்சுகொண்டு பிரிகிறோம். அதைவிட இது கொஞ்சம் ஆழமான வேதனைதான். ஆனால், இந்த மாதிரி வேதனைகளில்தான், நம் மாதிரி அதிர்ஷ்டக்கட்டைகளுக்குஒருசுகமேகிடைக்கிறது.

சட்டென்று முகத்தைத் திருப்பிக் கொண்டு, வேகமாய் நடந்தாள், ரேவதி.

யாரும் பார்க்கும் முன்பு, அவசரமாகக் கர்சீப்பை எடுத்தான், ராமு.



க்யூ வரிசைகளில்
முன்னேறுவதிலேயே
எங்கள் கவனம்
ஈர்க்கப்பட்டதால்
வேறு முன்னேற்றங்கள்
விலகிப் போய்விட்டன...

— 'ஆச்சா

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி — 1986

தமிழ் உரைநடை இலக்கியத்தின் மறுமலர்ச்சிக்குக் காரணமானவராக விளங்கி பட்டி தொட்டிகளிலெல்லாம் கூடப் பத்திரிகை படிக்கும் பழக்கத்தை உருவாக்கிய அமரர் "கல்கி" அவர்களின் நினைவாக ஆண்டுதோறும் கல்கி நடத்தும் சிறுகதைப் போட்டி இது:



| | | |
|---|---|---|
| முதல் பரிசு | ரூ. | 1000 |
| இரண்டாவது பரிசு | ரூ. | 500 |
| மூன்றும் பரிசு (இரு கதைகளுக்கு தலா ரூ. 250 வீதம்) | ரூ. | 500 |

ஆக மொத்தம் ரூ. 2000 பரிசுகளாக வழங்கப் பெறும்.

தவிர பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 100 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.

* கதைகள் சொந்தக் கற்பனை என்றும், இதற்கு முன் வேறு எந்த உருவிலும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.

* அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் எனவும் உறுதிமொழி தர வேண்டும்.

* நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

**கதைகளை அனுப்ப வேண்டிய கடைசி தேதி: ஜூன் 15**

* உறையின்மேல் அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி என்று குறிப்பிடுதல் அவசியம்.

* பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெறப் போதிய அளவு தபால் தலை ஒட்டிய சுயவிலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னல் தனியே அனுப்பிப் பயனில்லை.

* கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

* எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.

* சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

* போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் கல்கி ஆகஸ்டு 3 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.

* எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

ஆசிரியர், கல்கி, சென்னை — 600 032.


• செருப்புத் துடைத்து......


• மிஸ்டர் கிளீன்?


• ஏமாற்றம்.


• ஞானப்பழம்.

* **அன்புதாசன், கவுந்தப்பாடி.**

? **விமர்சனம் ஓஹோ என்று எழுதினால் அதையே விளம்பரங்களில் பெருமையாகப் போட்டுக் கொள்கிறார்கள். மட்டம் என்று எழுதினால் 'அதிமேதாவித்தனம்' என்று பத்திரிகைகளைக் கிண்டல் செய்து விளம்பரம் போட்டுத் தாக்குகிறார்கள் — இதுபற்றி என்ன நினைக்கிறீர்கள்?**

! தரமான பத்திரிகைகளில் விருப்பு வெறுப்பின்றி மனப்பூர்வமாகத் தோன்றுவதையே விமர்சனமாக எழுதுகிறார்கள். ஒரு படம் நன்றாக ஓடும் என்று தெரிவதாலேயே அதைப் பாராட்டிவிட முடியாது; ஓடாது என்பதால் ஒரு தரமான படத்தை மோசம் என்று எழுதிவிடவும் முடியாது. ஜெமினியின் 'சம்சாரம்' படத்தை கல்கி வாங்கு வாங்கு என்று வாங்கினார். ஆனால் படம் அமர்க்களமாக ஓடியது. இதனால் கல்கி எழுதியது அபத்தமாகி விடாது. இன்று படித்தாலும் அதில் காலத்தால் அழியாத நிரந்தர உண்மைகள் பிரகாசிக்கக் காண்போம். இப்படி எத்தனையோ உதாரணங்களைக் கூறலாம். இதைப் புரிந்து கொள்ளாத அதிமேதாவிகள் வெளியிடும் விளம்பரங்களை நாம் பொருட்படுத்தத் தேவையில்லை.

* **ராணி கோவிந்தகுமார், நீடாமங்கலம்.**

? **சர்க்கஸ் சாகசங்கள், அரசியல் சாகசங்கள் — ஒப்பிடவும்.**

! சர்க்கஸ் கோமாளிகளை விட அதிகமாகச் சிரிப்பை வரவழைக்கும் அரசியல் கோமாளிகள்தான் இங்கு இருக்கிறார்கள். சாகசம் புரியும் அரசியல்வாதி இன்று சல்லடை போட்டுச் சலித்தாலும் அகப்பட மாட்டார்.

* **ஆர். அரிகோபி, குடியாத்தம்.**

? **பெ. நா. அப்புசாமியின் மறைவு குறித்து?**

! பழுத்த பழம் உதிர்ந்தது. ஆனால் அவர் விட்டுச் சென்ற ஞானப் பழம் தேவைப்படுவோருக்கு என்றும் இனிக்க இனிக்க இருக்கிறது. தமிழில் முடியுமா என்றும் முடியும் என்றும் இன்னும் வாதாடிக் கொண்டிருக்கிறார்கள். பெ. நா. அப்புசாமியோ தமிழில் முடியும் என்று என்றோ நிரூபித்து விட்டவர். வாதாடலில் நேரத்தை வீணடித்தவர் அல்ல.

* **பேபி, கோவை.**

? **எர்ஷாத் ஏமாந்து விட்டாரா?**

! ஏமாற்றி விட்டார்!

* **ஆர். எஸ். லக்ஷ்மி, கோயமுத்தூர்.** *

? **ராஜீவை மிஸ்டர் கிளீன் என்று கூறுவது ஒன்றாம் நம்பர் பித்தலாட்டம்; என்ன சொல்கிறீர்?**

! 1. விசாரணைக் கமிஷன்கள் அளிக்கும் அறிக்கைகளை வெளியிட வேண்டிய அவசியமில்லை. "நாட்டு நலனை" உத்தேசித்து அவற்றை அரசு நாடாளுமன்றத்தில் கூட சமர்ப்பிக்காமல் அமுக்கி விடலாம் என்று ஒரு அவசரச் சட்டம் கொண்டு வந்தது; 2. 'நீ என் முதுகைச் சொறி நான் உன் முதுகைச் சொறிகிறேன்' என்பதுபோல், முஸ்லிம் பெண்கள் மசோதாவுக்கு அ. தி. மு. க. நாடாளுமன்ற உறுப்பினர்கள் ஆதரவைப் பெற்று, பதிலுக்கு மாநில மேலவையை ஒழிக்க அ. தி. மு. க. அரசுக்கு உதவுபடியாக இ. காங்கிரஸ் சட்டமன்ற உறுப்பினர்களை வோட்டுப் போடாமல் வெளியேறச் செய்தது; 3. ஸிலிகான் தயாரிப்பில் புரட்சிகரமான சாதனையை மேட்டூரில் நமது விஞ்ஞானிகள் நிகழ்த்தியிருக்கும்போது, உலகமே அச்சாதனையை வியந்து பாராட்டும்போது, கோடிக்கணக்கில் ரூபாயை அமெரிக்க நிறுவனம் ஒன்றுக்கு மத்திய அரசின் எலெக்ட்ரானிக் இலாகா அள்ளிக் கொடுத்து ஸிலிகான் டெக்னாலஜியைக் கற்றுத் தருமாறு கோரியிருப்பது — இதையெல்லாம் பார்க்கும் போது உங்களுடன் நானும் ஒத்துப் போக வேண்டியதாகத்தான் இருக்கிறது.

* **மு. கலியாண சுந்தரம், மேட்டுப்பாளையம்.**

? **அன்றைய சந்திரபாபு, கருணி இவர்களின் இடத்தை இன்று செந்தில் நிரப்பிவிட்டார் — சரிதானே?**

! பத்து பைசா குடுங்க சொல்றேன்!

* **எஸ். குருஸ்வாமி, சென்னை — 44.**

? **வயலின் வாசிப்புக்குத் தவில் பக்க வாத்தியம் என்றால் அதை முன்னேற்றம் என்பதா?**

! இசையில் சில பல பரீட்சார்த்தமான புதுமைகளைப் புகுத்துவதையே தவறு என்று கூறிவிட முடியாது. முன்னேற்றமானால் நிலைக்கும்; பின்னேற்றமானால் தன்னால் மங்கி மறையும். தனிப்பட்ட முறையில் எனக்கு வயலினுக்குத் தவிலும் பிடிக்கவில்லை; தவிலுக்கு ஏற்ப வயலின் வாசிக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுவதையும் தாங்க முடியவில்லை. சமீபத்தில் அமெரிக்க இசைக் கலைஞர் பில்லி ஸ்டீவன்ஸ், 'காலியோடோன்' என்ற இசை இயந்திரத்தின் உதவியுடன் ஜாஸ் முதல் சமீபத்திய ராக் அண்டு



* பத்து பைசா!.



* தமிழரின் நன்றி.

## நீங்கள் கேட்டவை

— தராசு

ரோல் வரை பல வகையான பாடல்களைப் பாடிக் காட்டினார். 'காஸியோ டோன்' என்ற அந்த இசை இயந்திரம் 22 விதமான இசைக் கருவிகளின் ஒலிகளை பட்டனைத் தட்டிய மாத்திரத்தில் எழுப்புகிறது! எனவே 22 வாத்தியக் கருவிகளின் பின்னணி இசையுடன் அவர் பாடுவது சாத்தியமாகிறது. ஆனால் மேடையில் இருப்பது ஒருவரே! இது ஒரு பிரமிக்க வைத்த, விஞ்ஞான முன்னேற்றம் என்றாலும் இசை, ஜீவனற்று மெகானிகலாகப் போய் விடுகிறது என்ற அளவில் உள்ளத்தைத் தொடவில்லை. இருப்பினும் இதுபோன்ற புதுப்புதுப் பரிசோதனைகள் நடக்கவே கூடாது என்று எப்படிக் கூற முடியும்?

* **த. சத்தியநாராயணன், சென்னை.**

? **நடைபாதை வாசிகளுக்காக ஷப்னா ஆஸ்மி உண்ணாவிரதம் இருந்தது குறித்து...?**

: காலையில் டிபன் சாப்பிட்டுவிட்டு வந்து, ஆறு மணிநேர உண்ணாவிரதத்தை முடித்துக் கொண்டு இரவு வெற்றிகரமான உண்ணாவிரதத்தைக் கொண்டாட ஃபைவ் ஸ்டார் ஓட்டலுக்குப் போய் வெட்டுகிற விஷயமல்ல இது! மெய்யான பச்சாதாபத்துடன் அந்த ரங்க சுத்தியுடன் நடந்த பல நாள் உண்ணாவிரதம். அந்தப் பம்பாய் நடைபாதை வாசிகளில் பலர் தமிழர்கள். அவர்கள் துயர் துடைக்க முன்வந்த ஷப்னா ஒவ்வொரு தமிழரின் நன்றிக்கும் பாத்திரராகிறார்.

* **ஷௌகத் அலி, கல்கத்தா.**

? **பர்னாலா குருத்வாராவில் செருப்புத் துடைத்தாரே?:**

! (அ) மதத்தலைவர்களின் தீர்ப்பை மறுபேச்சின்றி ஏற்று தலைவணங்கியது. (ஆ) உடல் வருந்திச் செய்கிற எந்தக் காரியத்திலும் இழிவு இல்லை என்று உணர்த்தியது. (இ) வீரத்தையும் தன்மானத்தையும் போதிக்கும் சீக்கிய மதம் அடக்கத்தையும் போதிப்பதை எடுத்துக் காட்டியது. (ஈ) இறைவனுக்குச் செய்யும் பக்தியை விட இறைவனது அடியார்க்குச் செய்யும் தொண்டு உயர்ந்தது என்பதைப் புரிய வைத்தது. (உ) இவை எல்லாவற்றுக்கும் மேலாக சீக்கிய மக்களின் ஒட்டுமொத்தமான அன்பையும் பரிவையும் முதல்வர் பர்னாலாவுக்குப் பெற்றுத் தந்தது — அந்த நிகழ்ச்சி.

* **ஆர். விஜயராஜ், பெரியகுளம்.**

? **தமிழக அமைச்சர்களுக்கு எய்ட்ஸ் பயம் வந்துள்ளதாமே?**

! பயம் வந்திருந்தால் கூடத் தேவலாம்; தமிழகத்தில்தான் எய்ட்ஸ் நோய் இருப்பது முதன் முதலில் கண்டுபிடிக்கப்பட்டது என்று பெருமையல்லவோ அடித்துக் கொண்டார் ஹண்டே! வெட்கித் தலைகுனிய வேண்டிய விஷயத்துக்குப் பெருமைப்படுவதா? இதைவிட வெட்கக்கேடு என்னவென்றால் இத்தனை மார்தட்டிக் கொண்ட பிறகு எய்ட்ஸ் நோய் இருப்பதாகச் சந்தேகிக்கப்பட்டவர்களில் யாருக்குமே அந்நோய் இல்லை என்று தீர்மானமானதுதான்!

* **ரூ. 10 பரிசு பெறுபவர்:**
**ஆர். எஸ். லக்ஷ்மி,**
**2/19, வி. என். ஆர். நகர்,**
**வடவள்ளி, கோயமுத்தூர்,**
**— 641 041.**

# ராஜீவை மிஸ்டர் கிளீன் என்று கூறுவது சரியா?

* 'டெசோ' மாநாட்டைப் பற்றி மிகைப்படுத்தாமலும், மறைக்காமலும் நடந்ததை நடந்தபடி எழுதிய தங்களைப் பாராட்டுகிறேன்.

கொப்பம்பட்டி, அன்பு மதியழகன்.

* தலையங்கத்தின் கடைசி இரண்டு வரிகளில் ராஜீவின் முகத்திரையைக் கிழித்திருப்பது வெகு அபாரம்.

காரிமங்கலம், கே.பி. கொண்டப்பா.

* தஞ்சை மாவட்டத்தில் கல்கி IIல் வரலாற்றுச் சிறப்பு மிக்க திருவையாறு தியாகராஜர் சமாதியின் அவல நிலையைப் பற்றி கலெக்டரிடம் எடுத்துச் சொல்லி கல்கி ஒரு வழி ஏற்படச் செய்யும் என எதிர்பார்த்தேன். நடக்கவில்லை.

கபிஸ்தலம், கோ. ராஜாமணி.

* தஞ்சை மாவட்ட சிப்ஸ் பயங்கர காரம். வித்தியாசமான விதத்தில் தொகுத்த 'யூகி'க்குப் பாராட்டுக்கள்.

கோவை, உமார்த்தி.

* தஞ்சை மாவட்டப் பிரச்னைகளைப் படித்து நொந்த இதயங்களுக்கு நா. மகாலிங்கம் அவர்களின் பேச்சு மருந்து தடவியது மாதிரி இருந்தது.

பட்டிவீரன்பட்டி, கண்ணம்மா.

* எங்கள் ஊர் ஒட்டக்குடி வாய்க்கால் பிரச்னை தொடர்பாக மனுக்கள் அனுப்பி மறியல் பல செய்து நொந்து போன எங்களைப் பற்றிக் கவலைப்பட கல்கியாவது இருக்கிறதே! இதோ ஓர் இறுதி முயற்சி என்று இந்த வாரக் கல்கி ஒன்றைப் பொதுப்பணித் துறையின் தலைமைப் பொறியாளருக்கு அனுப்பியுள்ளோம்.

அம்மையப்பன், கே.எம். பொன்னுசாமி.

* பளபளக்கும் பட்டின் பின்புறமுள்ள நெசவாளர்களின் வாழ்வு எவ்வளவு இருள்மயமானது என்பதை கவர் ஸ்டோரி வெட்ட வெளிச்சமாக்கியது! உழைப்புக்கேற்ற ஊதியமற்ற அவர்களின் வாழ்வு நிலை உள்ளத்தைத் தொட்டது.

திருவையாறு, குடந்தை முரளி.

* தஞ்சை மாவட்ட ஆட்சித் தலைவர்முன் வைக்கப்பட்ட புள்ளி விவரங்கள் மூலம், தங்கள் பிரதிநிதிகள் குழு தஞ்சை மாவட்டத்தை எந்த அளவுக்குச் சல்லடையிட்டு அலசியிருக்கிறது என்பதைத் தெள்ளத் தெளிவாகப் புரிந்து கொள்ள முடிந்தது. தெரிவிக்கப்பட்ட குறைகள் நிவர்த்திக்கப்பட்டால், தமிழகத்தின் நெற்களஞ்சியத்தினைப் பேணிப் பாதுகாக்கும் முயற்சிக்கு வித்திட்டமைக்காக இந்தத் தமிழ்நாடே என்றென்றும் உங்களுக்குக் கடமைப்பட்டிருக்கும்.

மதுரை, மேலூர் சுந்தரமூர்த்தி.

* இந்திரா சௌந்தர்ராஜனின் 'சந்துருவுக்கு வந்தவள்' சிறுகதை படித்தேன். அதில் யதார்த்தம், வித்தியாசம், மென்மை, உண்மை ஆகியன நிரம்பி வழிந்தன.

கடலூர், ஆர். வேலுமணி.

* தங்கள் தஞ்சை மாவட்டத்தில் கல்கி இதழில் (11.5.86) வெளியான புலனாய்வுக் கட்டுரையில் திருவாரூர்க் கற்கள் பற்றி வந்த தகவல்களைப் படித்தேன். அது சம்பந்தமாய்ச் சில விவரங்களைத் தங்களுக்குத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

திருவாரூர் அருள்மிகு தியாகராஜஸ்வாமி கோவில் வெளிப் பிராகாரத்தில் இருந்த கற்களுக்கும் ரெட்டை அரு. குடும்பத்தாருக்கும் எந்தவிதச் சம்பந்தமும் இல்லை. அவர்கள் பர்மாவிலிருந்தும் வரவில்லை. அவை எனது பாட்டனார் தேவகோட்டை சத்திரம் சோமசுந்தரம் செட்டியார் 65 ஆண்டுகளுக்கு முன்பு விட்டுச் சென்றவை. அந்தக் கற்களில் வேலைப்பாடு செய்யப்பட்ட தூண்கள் எவையும் இல்லை. 65 வருடங்கள் ஆனதால் மேற்படி கற்களில் காற்றுத் துவாரம் (Air holes) உள்ளன. ஆகையால் அவற்றை எவ்வளவோ ஏற்றுமதியாளர்கள், கருங்கற்களை விற்பனை செய்பவர்களை அழைத்து வந்து காட்டியும் அவர்கள் யாவரும் மேற்படி கற்கள் விற்பனை செய்ய முடியாதவை என்று பதில் அளித்தார்கள்.

நாங்கள் அறநிலையத் துறையினரிடம் அனுமதி பெற்று என் பாட்டனார் சேகரித்துவிட்டுச் சென்ற மேற்படி கற்களை விற்று, விற்றுவரும் அத்தொகையைப் பயன்படுத்தியும், பற்றுத்தொகை நாங்கள் கொடுத்தும் அக்கோவில் மேல ராஜ கோபுரத் திருப்பணியை முடித்துத் தரச் சம்மதித்தோம்.

கருங்கற்கள் 65 வருடங்கள் ஆனதால் கன அடி ரூ. 15/—க்கு கொடுக்க நாங்கள் இப்போதும் தயாராய் இருக்கிறோம். தேவைப்படுபவர்கள் யாரும் அவற்றை இப்பொழுது இருக்கும் நிலையில் மேற்படி விலைக்கு எடுத்துக் கொண்டால், அத்தொகை மேல ராஜகோபுரத் திருப்பணி வேலைக்கு உதவும். எங்கள் எண்ணமெல்லாம் தமிழ்நாட்டில் சமயக்குரவர் நால்வராலும் பாடப்பெற்ற ஸ்ரீ தியாகேசர் கோவில் திருப்பணி மிக நல்லவிதமாய் முடியப் பெற்று, குடமுழுக்கு விழா விரைவில் நடந்தேற வேண்டுமென்பதே.

திருவாரூர், ராம. சோமசுந்தரம் செட்டியார்.





# குருஜி

'தாய்' என்றதும் நமக்குப் பெற்ற தாயார்தான் நினைவுக்கு வருவாள். ஆனால் ஸ்ரீ புவனேசுவரி சுவாமிகள், "நம் ஒவ்வொருவருக்கும் நான்கு மாதாக்கள் உண்டு" என்று நினைவூட்டுகிறார். "நம்மைப் பெற்ற மாதா; நாம் வளர்ந்த பிறகும் நமக்குப் பால் அளிக்கும் கோமாதா; நாம் பிறந்த பூமியான பூமாதா; இவர்கள் அனைவருக்கும் மேலான ஜகன் மாதா! நால்வரையும் மறக்கவே கூடாது" என்கிறார்.

சுவாமிகளைத் தரிசிக்க திருவல்லிக்கேணி, அனுமந்தராயர் தெருவிலுள்ள புவனேசுவரி மந்திரத்தை அடைந்து உள்ளே சென்றால் முதலில் நம் சிந்தையைக் கவர்வது இனிய நறுமணம்தான். உடனே நமக்கு, 'எப்போதும் ஸௌக்கியத்தைச் செய்கிறவளான அம்பாளுடைய அருள் வெள்ளம் உலகில் நறுமணமாகப் பரவி வியாபிக்கிறது' என்ற ஸ்ரீ ஸூக்த வரிகள் நினைவு வருகின்றன. மரு, மருக்கொழுந்து, மல்லிகை, ரோஜா, பன்னீர், சந்தனம், குங்குமம் ஆகிய எல்லா மணங்களும் சேர்ந்து நம் அந்தராத்மாவையே ஊடுருவுகின்றன.

மாடி அறையே புவனேசுவரி கோவிலாக விளங்குகிறது. வெள்ளிக்கிழமை மாலை. புவனேசுவரி சுவாமிகள் பூஜை தொடங்குகிறார். கணீரென்று தேவியின் நாமங்களைக் கூறி அர்ச்சனை நடக்கிறது. நேரம், காலம் பற்றிய சிந்தனையே எழவில்லை. அம்பிகை கொலு வீற்றிருக்கும் அழகு, சின்னஞ் சிறு குடையும் முத்து ஆரங்களும் அணிந்திருக்கும் பாங்கு, வெண்பட்டுப் பாவாடை, இதர அலங்காரங்களின் நேர்த்தி—இவை பார்க்கப் பார்க்க இன்னும் பார்த்துக் கொண்டே இருக்க வேண்டும் என்ற ஆவலைத் தூண்டுகின்றன.

திருக்குற்றாலம் மௌன சுவாமிகளிடம் உபதேசம் பெற்ற இவர் "குருஜி" என்று அனைவராலும் அன்பும் மரியாதையும் கலந்து அழைக்கப்படுகிறார்.

அன்னையின் அருளைப் பக்தர்களுக்கு வாரி வழங்கும் புவனேசுவரி சுவாமிகள், இது வரை முந்நூறு கோயில்களுக்குத் திருக்குடந்நீராட்டு விழா நடத்தி வைத்திருக்கிறார் என்றால் அதிசயமாக இல்லையா! 85ல் மட்டும் எட்டு கும்பாபிஷேகங்கள்! தவிர எத்தனை எத்தனை யாகங்கள்! கஜ பூஜைகள்! கோ பூஜைகள்! ஸுவாஸினி பூஜைகள்! நவாவரண பூஜைகள்! கணக்கு வைத்துக் கொள்வது சாத்தியமில்லை. இந்த ஜூன் மாதத்தில் சென்னை கே.கே. நகரில் அமைக்கப்பட்டு வரும் ஸ்ரீ புவனேசுவரி திருக்கோயிலின் கும்பாபிஷேகம். தவிர, ஐ.ஸி. எஃப் காலனி வெங்கடேசுவர மகா மண்டபத்தில் கோடி காயத்ரி யக்ஞம்! சலிக்காமல் குருஜியின் கைகள் தேவி மீது புஷ்பங்களைத் தூவிக் கொண்டே இருக்கின்றன.

சங்கர பகவத்பாதரே ஸௌந்தர்ய லஹரியில் 'மும்மூர்த்திகளும் தேவியின் பாத தூளியைப் பூசிக்கொண்ட மகிமையால்தான் முத்தொழிலைச் செய்கிறார்கள்' என்றுதானே கூறியுள்ளார்! 'தேவி உபாஸனை என்பது எல்லாப் பெண்களையும் அன்னையின் வடிவமாகவும் சகோதரியாகவும் பாவிப்பதுதான்' என்று பெண் குலத்தையே உயர்த்தி தேவியிடம் ஒப்பிட்டு குருஜி பேசும்போது பெண்ணாகப் பிறந்த ஒவ்வொருவருக்கும் மனம் பூரித்துத்தான் போகிறது.

— சாந்தா.

# முதல் வசந்தம்

ஒரு காதல் கதையை அப்படித் திருகி, இப்படித் திருகி, ஏழை, பணக்கார வசனம் சேர்த்து, சண்டை, மசாலா சேர்த்துக் கொடுத்திருக்கிறார்கள் என்றாலும் கதையை நன்றாகவே பின்னி எடுத்திருக்கிறார்கள்.



பரிசல்கார சந்திரசேகரின் பாத்திரம் அழுத்தம். சுயமரியாதைச் சிற்பியாகவே கடைசிவரை வாழ்ந்துவிடுகிறார். மனைவியாய் வருகிற மஹாலக்ஷ்மியும் அடக்க ஒடுக்கமாய்ச் செய்திருக்கிறார். (இவரை கதாநாயகியாய்ப் போட்டிருந்தால் இன்னும் ஒரு படி மேலே போயிருக்குமோ என்று நினைக்காமல் இருக்கமுடியவில்லை.) சந்திரசேகரின் வசனங்களில் லேட்டாகப் பிரசார நெடி. அதுசரி அவர் கைகளைக் காவு கொடுக்கும் போதும் சரி, அநியாயமாய் அடிபட்டுச் செத்துப் போகும் போதும் சரி, ஊர் மொத்தமும் கைகட்டி வேடிக்கையா பார்த்துக் கொண்டிருந்தது?

ஹீரோ பாண்டியனும், ஹீரோயின்-ரம்யா கிருஷ்ணனும் வெறும் பகடைக் காய்கள். மற்றவர்கள் நகர்த்த நகர்த்த நகருகிற பாத்திரங்களாகிவிட்டபடியால், அப்படி ஒன்றும் ஓஹோ என்று சொல்லமுடியவில்லை. ஆனால் அந்தக் கனவுப் பாட்டில் கண், காது, மூக்கு, கழுத்து என்று க்ளோஸப்பில் காட்டி செமை கிளுகிளுப்பூட்டி விடுகிறார்கள்.

நதியின் நீரோட்டத்தின் மேற்பரப்பில் சிலிர்த்துக் கொண்டு பறக்கும் இரு பறவைகள், மிதக்கும் தீபங்கள் ஸில் அவுட் பாண்டியன் — ரம்யா என்று காமிரா பிரமாதமாக விளையாடி இருக்கிறது.

'ஆறும் அது ஆழமில்லை' பாட்டு ஆழமான பாட்டு. பின்னிக் கொண்டு வரும் இசை ஒரு சுகானுபவம். இன்னொரு முறை, இன்னொரு முறை என்று மனசைக் கேட்கச் செய்திருக்கிறது.

நீண்ட நாட்களுக்குப் பின் மணிவண்ணன் மறுபடி தமிழில் தலைகாட்டியிருப்பதாலோ என்னவோ, சிரத்தையுடன் செய்திருக்கிறார்.

அந்த க்ளைமாக்ஸ் மகா நீளம். இருந்தாலும் அலுப்பின்றி சென்றுவிட்டதென்றால் படத்தின் ஆணிவேரான குங்குமப் பொட்டுக் கவுண்டர் சத்யராஜ்தான் காரணம். காஷுவலாக வசனங்களை உதிர்ப்பதிலாகட்டும் ('பெரிய மனுஷன், கும்புடக் கூடாதா — இருக்கட்டும், இருக்கட்டும்') முகபாவங்களை மாற்றுவதிலாகட்டும், அலட்டிக் கொள்ளாமல் படு அமர்க்களமாக நடிப்பதிலாகட்டும்— வைரம்.

சத்யராஜும், மலேஷியா வாசுதேவனும் அந்த வயசுக்கு வந்த பெண்ணை பாட்டுப் பாடி கோட்டா பண்ணுவது, சந்திரசேகரின் கையை வெட்டிய பின்பும் சுயமரியாதைக் காரர் அதற்குப் பழி வாங்காமல் இருப்பது, இரண்டு பெரிய மனிதர்களின் அநியாய கொட்டம் ஆகிய இடங்களில் லாஜிக் நொள்ளைதான் என்றாலும், சினிமாதானே என்று சமாதானப்படுத்திக் கொள்ள முடிகிறது.

—ஜெயமன்மதன்.

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032. (Phone: 431543).

Assistant Editor: P. S. Mani. Editor: K. Rajendran.

PHILIPS

# பிலிப்ஸ்

## சரி, இந்த பல்பை வாங்குகிறீர்கள்... ஆனால் அதன் தன்மை பற்றித் தெரியுமோ உங்களுக்கு?



இதோ பாருங்கள்.

பார்த்தால் எல்லா பல்பும் ஒரே மாதிரிதான். நாட்பட, பல்பின் தரம் மோசமாக இருந்தால், அது குறைந்த வெளிச்சமே தரும். ஆனால் அதற்குத்தேவையான மின்சாரத்தின் அளவு குறைவதில்லை.

அரை பல்பு!

இந்த பல்பு நீடிக்கும் வரை பணம் விரயம்தான். சொல்லப் போனால், இம்மாதிரி பல்பு அதிகம் நீடித்தால் பண நஷ்டமும் அதிகமே.

இங்கிலேயில் சரியான பல்பை எப்படித்தான் கண்டு பிடிப்பது?

50 ஆண்டுகளுக்கும் மேலாக நம்பிக்கைக்குப் பாத்திரமான பல்பைத் தேர்ந்தெடுப்பதுதான் பாதுகாப்பான முறை

அதாவது பிலிப்ஸ் பல்ப். 100 %சரியாக சோதிக்கப்படும் பல்புகளை வழங்கி, அவற்றின் மூலம் ஒவ்வொரு யூனிட்டிற்கும் நீங்கள் செலவிடும் பணத்திற்கேற்ற மதிப்பை அளிக்கிறது இந்த நிறுவனம்.

100% நம்புங்கள். வாங்குங்கள் பிலிப்ஸ்.




தோற்றத்தில் எல்லா பல்புகளும் ஒன்றுதான். ஆனால் பிலிப்ஸ் என்றாலே நம்பிக்கைக்கு உறு

பிலிப்ஸ்–ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக இந்திய வீடுதோறும் விளங்கும் நம்பகமான பெயர்